# வேவலின் குருட்டு வைத்தியம்

## தேசபக்தர்களுக்கு சவால்

இந்தியரின் அரசியல் வியாதிக்கு வைத்தியம் செய்ய வேவல் துரையே முன்வந்துவிட்டார். பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் நோய்நொடிகள் தாண்டவமாடுகின்றதே என்ற கவலை: மற்ற நோய்களுடன் அரசியல் நெருக்கடி என்ற நோயும் நீடித்து விட்டது.

வியாதியால் அவஸ்தைப்பட்டு வரும் நோயாளியைப்பார்த்து "உனக்கு ஒரு வியாதியுமில்லை; வியாதியில்லை என்று நினைத்துக்கொள்" என்று உபதேசம்செய்கிறார் வேவல் பிரபு. "இந்தியாவுக்கும் பிரிட்டனுக்கும் உண்மையில் எவ்வித வித்தியாசமுமில்லை" என்று கூறுகிறார்.

நோயாளியின் உடல் நிலைமை மோசமாயிருக்கிறதே. நாளுக்கு நாள்பலஹீனம்ஏற்பட்டுவருகிறதே? என்று கேட்டால் "அப்படி எல்லாம் ஒன்றுமில்லை" என்று கூறிவிடுவார் இந்த குருட்டு வைத்தியர். அதனால்தான் இந்த யுத்தத்தில் இந்தியர்கள் லாபமடைந்திருக்கின்றனர் என்று கூறுகிறார். அரசியல் சூன்யவாதிகளைக்கொண்டு நடத்தும் நிர்வாகத்தை 'தேசிய சர்க்கார்' என்று வாய் கூசாமல் பேசுகிறார்.

இப்படிப் பேசிக்கொண்டே போவதற்கும், இந்தமாதிரி அனுமதேயங்களைக் காட்டி நிர்வாகம் நடத்திக் கொண்டு போவதற்கும் தேசத்திலுள்ள இரு முக்கியமான கட்சிகளையும் பிரித்து வைக்கவேண்டும். அதற்குத் தகுந்தபடி வேவல் பேசிவிட்டார்.

### பிளவுபடுத்தும் சூழ்ச்சி

லீகின் பாக்கிஸ்தான் கோரிக்கையை "இந்த நாட்டின் பெருமைக்கும், சுபிக்ஷத்துக்கும் குறுக்கே நிற்கும் கேடு; அதைத் தருவது பெரிய ரண சிகிச்சை" என்று கூறித் தள்ளிவிட்டார். இப்படிப் பேசியிருப்பதன்மூலம் பாக்கிஸ்தான் கோரிக்கை நாட்டைப் பிளவுபடுத்தும் கேடான கோரிக்கை என்ற எண்ணத்தைப் பலப்படுத்துகிறார்.

காங்கிரஸ்காரர்களிடையில் இந்த எண்ணத்தைப் பரப்பிவரும் பத்திரிகைகளுக்குக் கொண்டாட்டம். சென்னை 'பாரததேவி' "இந்திய அரசியல் பிரச்னைக்குப் பாக்கிஸ்தான் பரிகாரமல்லவென்பதை ஐக்கிய இந்தியாவில் நம்பிக்கை கொண்டவர்கள் அனைவரும் வரவேற்பார்கள். காங்கிரசும் இந்தியாவை இரண்டு தனி இராஜ்ஜியங்களாக்கக்கூடாதென்றே சொல்லுகின்றது" என்று எழுதுகின்றது.

"பாரததேவி" போன்ற அபிப்பிராயங் கொண்டவர்களை நம்பித்தான் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் பாக்கிஸ்தானை அரசியல் பிரச்னைக்குப் பரிகாரமல்ல என்றுகூறி, லீகர்களின் சுதந்திர அபிலாஷையைத் தடுத்து மறுக்கப் பார்க்கின்றது. லீகுக்கு ஆதரவு பெருகிவருகின்றது; லீகர்கள் கோரிக்கை பிரிட்டிஷ் ஏகாதிபத்திய ஆதிக்கத்தை உடைக்கும் சுதந்திரக் கோரிக்கை, என்பதனால் தான் வேவல் இவ்வளவு அழுத்தந் திருத்தமாக பாக்கிஸ்தானை எதிர்த்திருக்கிறார்.

காங்கிரஸ்காரர்களிடம் முஸ்லிம் லீகின் கோரிக்கைக்கு ஆதரவு ஏற்படாமல் செய்வதற்கு வழி, அவர்கள் மனதிலுள்ள சந்தேகத்தைப் பயன்படுத்திக்கொள்வதே. "இந்தியாவின் க்ஷேம லாபத்திற்கே பாக்கிஸ்தான் மாறுனது" என்று கூறுவதன்மூலம் காங்கிரஸ்காரர்களின் சந்தேகத்தை அதிகப்படுத்தி, காங்கிரஸும்—லீகும் சேராதபடி இருப்பதையே வேவல் விரும்புகிறார்.

### 'பாரததேவி'யின் மயக்கம்

லீக் கோரிக்கையை இப்படித் தாக்கிவிட்டு காங்கிரஸ் கோரிக்கையைப்பற்றி என்ன சொல்கிறார்

**சி. எஸ். சுப்ரமண்யம்**

வேவல்? "நீங்கள் பாதுகாப்பு விஷயத்தில் விசேஷ கவனம் செலுத்தவேண்டும்"; பாக்கிஸ்தான் ஏற்பட்டுவிட்டால் இந்தியாவின்பாதுகாப்புக்குப் பாதகம் ஏற்படும் என்று காங்கிரஸ்காரர்கள் பயப்படுகின்றனரல்லவா? அதைப் பயன்படுத்திக் கொள்ளுகிறார் இந்த ஏகாதிபத்திய சூழ்ச்சிக்காரர்.

"லீகின் பிடிவாதக் கொள்கையைப் புறக்கணித்து காங்கிரஸோடும் ஐக்ய இந்தியாவில் நம்பிக்கை கொண்ட தேசீய முஸ்லிம்களோடும் ஒரு ஏற்பாட்டுக்கு வருகிறது தானே" என்று கேட்கிறது 'பாரத தேவி'

ஏகாதிபத்தியத்தைப் பார்த்து கோடிக்கணக்கான முஸ்லிம்களின் கோரிக்கையை புறக்கணித்துவிட்டு காங்கிரஸுடன் ஒரு ஏற்பாட்டுக்கு வருவதுதானே என்று கேட்டால், முஸ்லிம் லீகர்கள், 'பாரததேவி' போன்ற மனப்பான்மையை யுடையவர்களின் தேசபக்தியில், சுதந்திர நல்லெண்ணத்தில் எப்படி நம்பிக்கை வைக்கமுடியும்?

காங்கிரஸ்காரர்கள் கோரும் தேசீய சர்க்காரும் கிடையாது என்று வேவல் கூறிவிட்டார். முக்கியமான கட்சிகள் பங்கெடுத்துக்கொள்ளும் சர்க்கார் ஏற்பட்டாலும் அது தற்சமயம் அமுலிலுள்ள அரசியல்சட்டத்துக்குட்பட்டிருக்க வேண்டும் என்று கூறிவிட்டார்.

### தேசபக்திக்கு சவால்

வேவல் உபதேசத்தின் பாடம் என்ன? இப்படிப் பிரித்துவைக்கும் சூழ்ச்சியை உடைக்கவேண்டும். இதை ஓரளவுக்கு உணர்ந்த தினமணி' "இன்றைய நிலையில் உள்ள அபாயத்தை லீக் தலைவர்கள் உணர்ந்து பிரத்யட்ச புத்தியுடன் நடந்துகொள்ள முற்பட்டால் வேவல்களெல்லாம் ஒன்று சேர்ந்தால்கூட அவர்களைச் சமாளித்து தேச லட்சியத்தை அடைவதற்கான சக்தியைத் திரட்டமுடியும்" என்று எழுதுகின்றது.

லீக் தலைவர்கள் பிரத்யட்ச புத்தியுடன் நடந்துகொள்ள வேண்டும் என்று லீகர்களுக்கு உபதேசம் செய்தால் "நீங்கள் எந்த அளவுக்கு பிரத்யட்ச புத்தியுடன் நடந்துகொள்கிறீர்கள்" என்று லீகர்கள் கேட்பார்

(6-ம் பக்கம் பார்க்க)

## காங்கிரஸ்-லீக் கூட்டுமுன்னணி

### புலாபாய் தேசாய் அறிக்கை

"மத்திய சட்டசபையில் காங்கிரஸ், லீக் கட்சிகளிடம் நல்லுணர்ச்சியும் நேசப்பான்மையும் ஒத்துழைப்பும் மிளிர்ந்தது. அதிகாரவர்க்கத்தை எதிர்த்து நிறுவப்பட்ட ஐக்கிய முன்னணி வளர்ந்தது. எதிர்நோக்கும் பிரச்சினைகளை தேசிய கண்ணோட்டத்தில் பரிசீலனை செய்து தீர்மானங்கள், திருத்தங்கள்பற்றி முடிவுகள் எடுத்தோம்" என்று கூறினார் மத்திய சட்டசபை எதிர்கட்சி தலைவர் புலாபாய் தேசாய்.

("ஹிந்து" பம்பாய் நிருபர்)

## காளப்பா கூறுகிறார்

அகில இந்திய முஸ்லிம் லீகின் தினசரிப் பத்திரிகை டான். அதன் நாகபுரி நிருபர் பின்வருமாறு எழுதுகிறார்:—

"மத்திய மாகாண சட்டசபை காங்கிரஸ் கட்சி காரியதரிசியும், தொழிற்சங்க காங்கிரஸின் மாஜி தலைவருமான ஸ்ரீ வி. ஆர். காளப்பாவை நான் பேட்டி கண்டேன். முஸ்லிம் லீகின் ஒத்திவைப்பு தீர்மானங்களுக்கு காங்கிரஸ் சட்டசபை கட்சி ஆதரவளிக்க முன்வந்திருப்பதை வரவேற்பதாகக் கூறினார். பாதுகாப்புக் கைதிகளின் விடுதலைக்காக காங்கிரஸ் கொண்டுவரும் தீர்மானங்களுக்கு லீக் பரிபூர்ண ஆதரவளிப்பதைக் கண்டு சந்தோஷப்பட்டார். பஞ்சாப் சட்டசபையில் காங்கிரஸ்—லீக் ஐக்கிய முன்னணியின் பயனாய் யூனியனிஸ்ட் மந்திரிசபை சீக்கிரமே வீழ்ச்சியடையும் என்று நம்பிக்கையுடன் எதிர்பார்க்கிறார். இறுதியில், பஞ்சாப் சட்டசபையிலும் மத்திய சட்டசபையிலும் நிறுவப்படும் காங்கிரஸ்-லீக் ஐக்கிய முன்னணியின் பயனாய், சுதந்திரத்துக்காக காங்கிரஸ், லீக் ஆகிய இரு தேசீய ஸ்தாபனங்களும் நிரந்தர ஒற்றுமை அமைக்கும் நன்னாளை எதிர்பார்ப்பதாகக் கூறினார்."

## ரூ. 15,000 நிதிக்கு

## கம்யூனிஸ்டு கட்சியின் வேண்டுகோள்

"பொதுவுடமைக்காரர்களைக் குற்றம் சொல்வது மட்டும் பிரயோஜனமில்லை. அவர்கள் எந்தத் துறைகளிலெல்லாம் வேலைசெய்கிறார்களோ அவைகளை யெல்லாம் காங்கிரஸ் வாதிகள் கைப்பற்ற வேண்டும். ஊக்கமும் உறுதியும் புது உற்சாகமும் வேண்டும்......... பொதுவுடமைக்காரர்களை ஜெயிப்பதற்கு அது ஒன்றுதான் வழி"—

தினசரி 19-12-44.

நாம் செய்துள்ள பொதுஜன சேவைக்கு நற்சாட்சிப் பத்திரமாக தினசரியின் தலையங்கத்தி லிருந்து மேற்கூறிய வாசகங்களை கொடுக்கவில்லை ஆனால் ஓயாமல் நம்மை திட்டுகிறவர்களும் இன்று ஆலோசனை செய்ய ஆரம்பித்திருக்கின்றனர் என்பதை எடுத்துக் காட்டவே இதைக் கொடுத்துள்ளோம்.

தேசத்துக்குக் கடந்த $2\frac{1}{4}$ வருடங்களாக ஏற்பட்டுள்ள ஆபத்தான நிலைமையை விவரிக்க வேண்டியதில்லை. பஞ்சம், மனச்சோர்வு அடக்குமுறை தலைவிரித்தாடும் காலம். பொருளாதார வாழ்க்கையின் சீர்குலைவு; அரசியல் வாழ்வின் சீரழிவு.

இந்தக்காலத்தில் மக்களுக்கு பணிபுரிய நமக்கு உறுதியும், ஊக்கமும் அளித்தது எது? நம் தேசத்தின் பழம் பெரும் நாகரீகத்தில் நாம் கொண்டிருக்கும் நம்பிக்கை; நம் மக்களின் தேசபக்தியில் நமக்கிருந்த நம்பிக்கை; நாட்டின் எதிர்காலத்தில் நமக்குள்ள அசையா உறுதி; நாம் கடைப்பிடிக்கும் கொள்கை சரியான கொள்கை என்ற தெளிவு.

இன்று நிலைமை இன்னும் பயங்கரமாகிறது. ஒற்றுமை நிறுவ வேண்டிய தருணத்தில் புதிய சகோதர சண்டைகள் வளர்கின்றன. சீற்றமும் பொருமையும் பரந்தோங்கி நிற்கிறது. இதன் விளைவாக சீர்குலைவுப் போக்குக்கு ஆதரவு ஏற்படுகிறது.

ஆனால் இது கண்டு நாம் ஆத்திரமடையவில்லை; மலைக்கவும் போவதில்லை. அவர்கள் வசைமாரிகள் எங்களை இன்னும் அதிகமாக தேச மக்களின் சேவையில் ஈடுபட ஊக்கமளிக்கும் என்று உறுதி கூறுகிறோம்.

தேசம் அடுத்தபடி முன்னேற, இந்த சீர்குலைவை தடுத்து நிறுத்த வேண்டும். சகோதர கட்சிகளிடை நல்லுணர்ச்சியை வளர்த்தாகவேண்டும். காங்கிரஸ் வாதிகளும் முஸ்லீம் லீகர்களும் ஒருவரை யொருவர் புரிந்துகொண்டு ஒற்றுமை வளர்க்க உதவ வேண்டும். பாஞ்சாலத்தின் பாதையில் தமிழ் நாடும் செல்வதற்கான சூழ் நிலையை சிருஷ்டிக்க வேண்டும். இதன் மூலமே காந்திஜி-ஜின்னு சந்திப்பு மீண்டும் ஏற்பட, தலைவர்களுக்கு நாம் உதவுவோம்.

உணவு நெருக்கடி தீர்க்க, முன்னைவிட பன்மடங்கு ஊக்கத்துடன் சேவை செய்து, சகல கட்சிகளையும் பஞ்சம் போக்க ஒன்று சேர்க்க வேண்டும்.

இந்தக் கடமைகளை நிறைவேற்ற முடியும் என்ற நம்பிக்கை எங்களுக்கு உண்டு. கம்யூனிஸ்டு கட்சிக்கு தமிழர்கள் சென்ற காலம் காட்டி வந்திருக்கும் ஆதரவே எங்களை உற்சாகப்படுத்துகிறது. அந்த அஸ்திவாரத்தில் மீண்டும் உங்களை அணுகுகிறோம். தமிழ் நாட்டில் கட்சி வேலைகளைச் செவ்வனே செய்ய ரூ. 15,000 உடனடியாகத் தேவை. தமிழர்கள் எல்லோரும், தொழிலாளர்கள், விவசாயிகள், மாணவர்கள், பொதுமக்கள் சகலரும் தங்கள் சக்தி யனுசாரம் கொடுத்து எமது கட்சியை ஆதரிக்குமாறு வேண்டுகிறோம்.


# ஜனசக்தி

இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சி தமிழ்நாட்டுக் கமிட்டியின் வாரப் பத்திரிகை

மலர் 3. இதழ் 13. | புதன்கிழமை 27—12—44 | விலை 2 அணா

தந்தி விலாசம் "ஜனசக்தி" டெலிபோன் நெ. 3887.

வருட சந்தா ரூ. 5. 6 மாதம் ரூ. 3. 3 மாதம் ரூ. 1-8-0.


## தொழிலாளர்கள் தீர்ப்பு

சென்னை டிராம்வேத் தொழிலாளிகள் தீர்ப்புக் கூறிவிட்டனர். சங்கவேலையில், தொழிலாளர்கள் ஸ்தாபனத்தில், சீர்குலைக்கும் முயற்சிக்கு இடமில்லை என்று தீர்ப்புக் கூறிவிட்டனர். நிர்வாகத்தில் கம்யூனிஸ்டுகள் புகுந்துகொண்டு தொழிலாளர்களுடைய நலன்களைப் புறக்கணித்துவிட்டார்கள் என்று கூறுவது அர்த்தமற்ற பேச்சு என்று முடிவு செய்துவிட்டனர்.

இம்மாகாணத்திலேயே தொழிற்சங்க உணர்ச்சிமிகுந்த தொழிலாளிகள் டிராம்வே தொழிலாளிகள். கம்பெனியில் வேலைசெய்யும் 2200 தொழிலாளர்களில் சுமார் 1700 பேர் சங்க அங்கத்தினர்கள். கடந்தகாலத்தில் பல போராட்டங்களை நடத்தி ஸ்தாபனத்தை பலப்படுத்தியவர்கள் அந்தத் தொழிலாளிகள்.

அத்தகைய சங்கத்திலிருந்து கம்யூனிஸ்டுகளை விரட்டிவிடுவது என்று கங்கணங்கட்டிக்கொண்டு ஒரு சிறு கோஷ்டி நின்றது. அக் கோஷ்டிக்கு உதவியாக சென்னையிலுள்ள "பாரத தேவி", "தினமணி" பத்திரிகைகள் நிற்கின்றன. தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி உபதலைவர் ஸ்ரீமதி ருக்மணி லக்ஷ்மிபதியும், காங்கிரஸ் புனர்நிர்மாணமென்று கூறிக்கொண்டு, தொழிலாளரிடையில் தொடர்பு ஏற்படுத்திக்கொள்வதாக எண்ணும் வேறு சில காங்கிரஸ்வாதிகளும் அவர்களுக்கு உதவி புரிகின்றனர். "கணேசன் ராஜிநாமா செய்துவிடட்டுமே" என்று உபதேசம் செய்தனர். ஆறுவருஷகாலமாக சிறப்பாக நடந்துவரும் தொழிற்சங்கத்தின் கூட்டங்களில் கலகம் செய்து கூட்டத்தையும் கலைக்க ஆரம்பித்தனர். பிரச்னைகளை விளக்கி பிரசாரம் செய்ய சந்தர்ப்பமும் இல்லாதபடி செய்தனர்.

சங்க நிர்வாகம் கணேசன் தனிப்பட்டமுறையில் ஒன்றும் செய்யவில்லை என்றுகூறி, அவரிடத்தில் தொழிலாளர்களுக்கு நம்பிக்கை உண்டா இல்லையா என்பதை தொழிலாளர்களுடைய தீர்ப்புக்கு விட்டது. கணேசனை விரட்டவேண்டுமென்றவர்கள் கோரியபடி ஒருமாத சந்தா கொடுத்த தொழிலாளிக்குக்கூட பாலட்டில் பங்கெடுத்துக்கொள்ள உரிமையை நிர்வாகம் அளித்தது. 17, 18ந் தேதி நடந்த பாலட்டில் சங்க அங்கத்தினர்களில் 891 பேர், பாதிக்கு மேற்பட்டவர்கள், பங்கெடுத்துக்கொண்டனர். 875 பேர் கணேசனிடம் நம்பிக்கை யிருக்கிறதென்று தெரிவித்தனர். எதிராக 14 ஓட்டுகள்தான் போடப்பட்டன.

தொழிலாளர்களுடைய ஆதரவு தங்களுக்குக் கிடைக்காது என்பதை உணர்ந்த விஷமிகள், 'நாங்கள் பாலட்டை பகிஷ்கரிக்கப்போகிறோம்' என்று கூறிவிட்டனர். பொய்யும், புரட்டும் கூறி வந்தவர்களில் ஒரு அனுமதேயப் பேர்வழி, "டிராம்வேயில் வேலை செய்யும் 3000 தொழிலாளிகளில் 891 பேர்தானே ஓட்டுப் போட்டனர். இந்த பாலட் அர்த்தமற்றது" என்றுகூறி அறிக்கை விட்டிருப்பதாக "தினமணி" விளம்பரப் படுத்துகிறது.

டிராம்வே தொழிற்சங்கத்தின் அங்கத்தினர் தொகை சுமார் 1700. அதில் பாதிக்கு மேற்பட்ட தொழிலாளர்கள், தங்கள் வேலை நாட்களில் வந்து ஓட் போட்டார்கள் என்பது அவர்களுடைய சங்க உணர்ச்சியைக் குறிக்கின்றது. வேறு எந்த சங்கத்திலும் இவ்வளவு அங்கத்தினர்கள் பங்கெடுத்துக் கொள்வதில்லை. பங்கெடுத்துக் கொண்டதில் 800 தொழிலாளிகள் 9 மாதங்கள் சந்தா செலுத்தியவர்கள் மிகப் பெரும்பான்மையோர்.

டிராம்வே தொழிலாளர்களின் தீர்ப்பு கணேசனைப்பற்றி மட்டுமல்ல, தங்களுடைய ஸ்தாபனத்தில், வர்க்க ஸ்தாபனத்தில் எத்தகைய சீர்குலைவுப் போக்குக்கும் இடமில்லை என்ற முடிவைத் தெரிவித்துவிட்டனர்.

காங்கிரஸ் நிர்மாணத் திட்டத்திலொருபகுதி தொழிலாளர்களிடையில் தொடர்பு ஏற்படுத்திக்கொண்டு வேலைசெய்வது. இந்த வேலையைச்செய்வதன்மூலம் தொழிலாளர்கள் ஸ்தாபனமும் பலமடைந்து, தேசிய ஸ்தாபனமாகிய காங்கிரஸும் பலம்பெற வேண்டுமென்றால், அதற்கு வழி தொழிற் சங்கத்தில் தலைகிளப்பும் சீர்குலைவுக் கும்பல்களை ஆதரிப்பதன் மூலமல்ல. தொழிலாளிகளிடையில் பிளவேற்படுத்தும் கும்பலை ஒதுக்கித் தள்ள தொழிலாளர்களுக்குத் தெரியும். கம்யூனிஸ்டுகளிடமுள்ள வெறுப்பின் காரணமாக தொழிலாளிகளுக்குள் பிளவேற்படுத்தும் கட்சிகளை ஆதரிக்க காங்கிரஸ்வாதிகள் முன்வந்தால் அந்த முயற்சி பயன் தராது என்பதை டிராம்வே பாலட் உணர்த்துகிறது.

காங்கிரஸ் தலைவர்கள் தொழிலாளர்களுடைய நலன்களுக்குப் பாடுபட முன் வருவது நல்லதுதான். வரவேற்கத் தக்கதும்கூட. ஆனால் தொழிற்சங்கங்களில் சீர்குலைவு ஏற்படுத்தவும், போட்டி ஸ்தாபனங்களுக்கு ஆதரவு அளிக்க முன்வருவதும் சரியல்ல என்பதை மீண்டும் வற்புறுத்தவேண்டி யிருக்கிறது.

கலகம் செய்துவரும் கோஷ்டி, பாலட்டில் பங்கெடுத்துக் கொள்ளப் போவதில்லை என்று அறிவிக்காமலிருந்தால், இன்னும் பல நூற்றுக்கணக்கான தொழிலாளிகள், தோழர் கணேசனிடமும், நிர்வாகத்தினிடமும் நம்பிக்கையைத் தெரிவிக்க வோட் போட முன் வந்திருப்பார்கள். "அவர்கள்தான் வரப்போவதில்லையே" என்ற மனோபாவத்தில் பலர் அன்று வராமலிருந்துவிட்டனர். இருந்தும், மொத்த அங்கத்தினர்களில் பாதிக்கு மேற்பட்டவர்கள் பாலட்டில் கலந்துகொண்டது குறிப்பிடத் தக்கது.

டிராம்வே தொழிலாளர்களுக்கு ஆப் தினத்திற்குச் சம்பளம் வேண்டும் என்ற குறை. போக்குவரத்து மகாநாடு நடத்திய நாள் முதல்கொண்டு தங்களுடைய குறைகளைத் தீர்த்துக்கொள்வதற்கு பொதுஜன ஆதரவைத் தேடி வந்திருக்கின்றனர். பொதுஜன ஆதரவும் திரண்டுகொண்டு வந்திருந்த இந்த சமயத்தில் டிராம்வே தொழிலாளர்களின் குறைக்கு ஆதரவு அளித்து பொதுக் கூட்டங்கள் மூலம் சங்க நிர்வாகத்துடன் சேர்ந்து கிளர்ச்சி செய்ய காங்கிரஸ் தலைவர்கள் உதவி இருக்கலாம்; சங்கத்தின் வேலைக்கு குறுக்கே நின்று கூட்டங்களைக் கலைக்கும் கோஷ்டியை ஆதரித்தனர் சில காங்கிரஸ்காரர்கள், அப்படிச் செய்வது சரியல்லவென்பதை டிராம்வே தொழிலாளர்கள் தெரிவித்துவிட்டனர்.

# கம்யூனிஸ்ட் வேட்டை

## காங்கிரஸுக்கு தீமை

“கம்யூனிஸ்டு, ராயிஸ்டு அல்லாத ஆகஸ்டு தீர்மானத்தை ஆதரிக்கும் அனைவருக்கும் இச் சங்கத்தில் சேர அருகதையுண்டு”

இதுதான் அரியலூர் மகாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தின் வாசகம். கம்யூனிஸ்டுகள் ஆகஸ்டு தீர்மானத்தை ஆதரித்தாலும் சரி, ஆதரிக்கா விட்டாலும் சரி, அவர்களுக்கு இடம் கிடையாது!

“அரியலூரில் நிறைவேற்றப்பட்ட இந்த தீர்மானமானது கோபத்தை அடிப்படையாகக் கொண்டது; காந்திஜியின் சத்தியாக்கிரஹ தத்துவத்துக்கு முரணானது” என்று தேசீய வாரப் பத்திரிகை ஹிந்துஸ்தான் நிருபர் எழுதுகிறர். “தலையின்றி வாலாடின விந்தை” என்று எழுதுகிறர். சகல தமிழ் நாட்டு தேசபக்தர்களையும் ஒன்று படுத்தி அழைத்துச் செல்லக்கூடிய தலைவர் இல்லை என்பதை அரியலூர் மகாநாடு நிதரிசனமாக்கி விட்டது என்று கருதுகிறர்.

மகாநாட்டின் சர்வாதிகாரியாய் விளங்கினர் முத்துரங்க முதலியார். விஷயாலோசனைக்கமிட்டியைக்கூட அவரே பொறுக்கி எடுத்தார். விஷயாலோசனைக் கமிட்டியின் வள்ளல் தெரியுமா உங்களுக்கு? சென்னையிலிருந்து யார் யாரோ பொறுக்கப் பட்டார்கள். ஆனல் நகர காங்கிரஸ்காரியதரிசி, கிராமணியாருக்கு கூட இடமில்லை. ஏனென்று கேட்கிறீர்களா? முதலியாரின் கம்யூனிஸ்டு எதிர்ப்பு தீர்மானத்தை அவர் எதிர்ப்பாரோ என்ற பயம்தான்!

### தேசீயப் பத்திரிகை

கம்யூனிஸ்ட் எதிர்ப்பு ஒன்றுதான் மகா நாட்டை நடத்தியவர்களின் நோக்கம் என்பதை மகாநாட்டைப் பற்றி பத்தி பத்தியாய் தலையங்கம் எழுதியிருக்கும் “தேசீய” பத்திரிகைகளைப் படித்தாலே நன்கு விளங்கும். ஒரு உதாரணம் தருகிறேன். தினசரி எழுதுகிறது:—

“பொதுவுடமைக்காரர்களை குற்றம் சொல்வதில் மட்டும் பிரயோசனமில்லை. அவர்கள் எந்தெந்த துறைகளில் வேலை செய்கிறர்களோ அவைகளை யெல்லாம் காங்கிரஸ்காரர்கள் கைப்பற்ற வேண்டும்...... பொதுவுடமைக்காரர்களை ஜயிப்பதற்கு அது ஒன்றுதான் வழி”

பஞ்சத்திலும் நோய் நொடிகளிலும் அனலிலகப்பட்ட புழுப்போல் துடிக்கும் தமிழ் மக்களை பாதுகாக்க பணியாற்ற வேண்டுமென்பதற்காக வில்லை நிர்மாண திட்டம். பொதுவுடமைக்காரர்களை எதிர்த்துப் போர் செய்து அவர்களை முறியடிக்க வேண்டும்; அவர்கள் செல்வாக்கை ஒழிக்கவேண்டும். இதுதான் “தினசரி” யின் கண்ணோட்டம். சைத்தான் வேதத்தை மேற்கோள் காட்டுவது போல், நிர்மாண திட்டத்தின் பெயரால் நாசவேலை செய்வதே மகாநாட்டின் நோக்கம்போலும்! “ப்ரீ பிரஸ்” என்ற தினசரி இதை சுவரொட்டியிலேயே வெட்டவெளிச்சமாக்குகிறது. அரியலூர் மகாநாட்டைப்பற்றி அது என்ன தலைப்பு போட்டது தெரியுமா? “கம்யூனிஸ்ட் எதிர்ப்பு ஐக்கிய முன்னணி” என்பதுதான்.

கம்யூனிஸ்ட்களை ஒழிக்க கச்சை கட்டிக்கொண்டதுதான் மகாநாட்டின் சாதனை. “ஆர்ப்பாட்டமான பிரசங்கங்களுக்கும் தீர்மானங்களுக்கும் குறைவில்லை. ஆனல் இன்று நாட்டுக்கு செய்யவேண்டியவைகளென்னவென்பதைக் குறித்து ஆலோசித்து திட்டம் வகுக்கப்படவில்லை.” என்று ‘ஹிந்துஸ்தான்’ எழுதுகிறது. எப்படி? ஆயிரக்கணக்கான காங்கிரஸ்வாதிகளுக்கு வழிகாட்டக்கூடிய மகாநாட்டின் லக்ஷணம்!

கம்யூனிஸ்ட்களை ஒழிக்கிறேனென்று முத்துரங்க முதலியாரை விடப் பெரியவர்கள் முனைந்து நின்று தோற்றுவிட்டார்கள். இதைப்பற்றி நாம் கவலைப்படவில்லை. ஆனல் நிர்மாணதிட்டத்தின் பெயரால் சகோதர சண்டை நடத்துவதால், காங்கிரஸே சீர்குலைந்துவிடுமென்பதை காங்கிரஸ்காரர்களின் தேசபக்தியே அவர்களுக்கு உணர்த்தவேண்டும்.

# கோவை காட்டும் தேசபக்திப் பாதை

டிஸம்பர் 12ம் தேதி கோவை ஜில்லாக் காங்கிரஸ் ஊழியர்கள் கூட்டம் கூடியது. காங்கிரஸ் கொடியின்கீழ் இடைவிடாது தொண்டாற்றிவந்த சுமார் 150 ஊழியர்கள் பிரசன்னமாயிருந்தனர்.

“கம்யூனிஸ்டுகள் கலந்துகொள்ளக்கூடாது” என்று ஒரு சிலர் எழுப்பிய ஆட்சேபணைக்கு தலைவர் ஸ்ரீ அவிநாசிலிங்கம் செட்டியாரும் ஜில்லா காங்கிரஸ் கமிட்டி காரியதரிசி ஸி. சுப்ரமண்யமும் பதிலளித்தனர்.

வங்கத்திலும் பீகாரிலும் பஞ்சத்தாலும் பிணியாலும் பொதுமக்கள் படும் துன்பத்தையும் கஷ்டத்தையும் தலைவர் தத்ரூபமாக சித்தரித்தார். கோவையில் பஞ்சப் பேயை விரட்டியடிக்க சகல கட்சிகளுடனும் ஒத்துழைக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டார். உணவு வேலையை விட உயர்ந்த நிர்மாண திட்டமில்லையென்றும் கொள்முதல் திட்டத்தை அமுலுக்கு கொண்டு வருவதில் சேவை செய்யவேண்டுமென்றும் கொள்முதல் திட்டத்திலுள்ள குறைகளைப் போக்க பொதுஜன உணவு கமிட்டிமூலம் முயற்சிக்கவேண்டுமென்றும் கூறினர். ஒத்துழையாமையா ஒத்துழைப்பா வென்பதல்ல பிரச்னை; மக்களின் உயிரைக் காக்க வேண்டும் என்று கூறினர்.

உணவு பிரச்னை சம்பந்தமாக வேண்டிய விஷயங்களை ஆலோசித்து ஓர் அறிக்கை தயார் செய்ய ஸ்ரீ வி. கே. பழனிசாமி கவுண்டரை கன்வீனராககொண்ட ஒரு கமிட்டி ஏற்படுத்தப்பட்டது.

# பாட்டாளி மக்களின் பரமநண்பன்!

## பாடீலின் பகல் வேஷம் கலைந்தது

ரயில்வே தொழிலாளர்களின் குறைகள் பல. இதுபற்றி கிளர்ச்சி நீண்டநெடுங்காலமாக நடந்து வருகிறது. சமீபத்தில் கூடிய அகில இந்திய ரயில்வே சம்மேளனம் இதுபற்றி ரயில்வே போர்டை பேட்டி காண ஒரு தூது கோஷ்டி நியமித்தது. போர்டும் பேட்டி காண சம்மதித்திருக்கிறது.

இச்சமயத்தில், பி.பி.ஸி.ஐ. ரயில்வே தொழிலாளர்கள் வேலைநிறுத்தம் செய்தனர்.

வேலைநிறுத்தவாதிகளுக்கு அனுதாபம் தெரிவித்து பாடீல் பம்பாய் கார்ப்பொரேஷனில் ஒரு தீர்மானம் கொண்டுவந்தார். தொழிலாளர்களுக்கு காங்கிரஸின் ஆதரவும் பொதுஜன ஆதரவும் உடனடி தேவையாயிருந்தது. அதனல் இந்த நடவடிக்கை வரவேற்கத்தக்கதே.

ஆனல் பாடீலின் நோக்கம் இதுவல்ல. இந்த சந்தர்ப்பத்தை உபயோகித்துக்கொண்டு யூனியனையும் அதன் தலைவர்களையும் தாக்கினர்.

ஏன் தெரியுமா? சங்கம் வேலைநிறுத்தத்துக்கு அனுமதி தரவில்லையாம். பொதுமக்களின் நலனைக் கருதி, வேலைநிறுத்தத்தை கைவிடும்படி யூனியன் சொன்னது தவரும்!

இந்த வேலைநிறுத்தத்தால் வெளியேற்றப்பட்ட ஸுல்மிராம் சவுதரி என்பவர் பாடீல் தீர்மானத்துக்கு ஒரு திருத்தம் கொண்டுவந்தார். “45 ரூபாய் பஞ்சப்படி ரயில்வே தொழிலாளிகளுக்குக் கொடுக்க வேண்டும், அல்லது மத்தியஸ்த போர்டு ஏற்படுத்தவேண்டும் என்று மேயர் சிபார்சு செய்யவேண்டும்” என்பதே திருத்தம். அகில இந்திய ரயில்வே சம்மேளனத் தலைவர் எஸ். ஸி. ஜோஷியும், பம்பாய் தொழிற்சங்க காங்கிரஸ் தலைவர் மிராஜ்கரும் இதை ஆதரித்தனர்.

பாட்டாளி மக்களின் பரம நண்பன் என்று பகல் வேஷம் போட்டுத் திரியும் பாடீல் என்ன செய்தார் தெரியுமா? திருத்தத்தை ஏற்றுக் கொள்ள மறுத்துவிட்டார். ஏன் என்று கேட்கிறீர்கள்? கம்யூனிஸ்ட்கள் சொல்லும் யோசனையை அவர் ஆதரித்தால், கம்யூனிஸ்டுகளுடன் ஒத்துப் போவதாகவல்லவா முடியும்? அப்புறம், கம்யூனிஸ்டுகளுடன் அரசியல் தொடர்பு கூடாது என்ற அவர் தீர்மானத்தை அவரே மீறினதாகவல்லவா ஏற்படும்?

திருத்தத்தை ஏற்றுக்கொள்ள மாட்டேன் என்றர். “கார்ப்பொரேஷன் தொழிற்சங்கமல்ல” என்று எரிந்து விழுந்தார்.

பாடீல் சொற்படி 34 காங்கிரஸ்வாதிகளும் திருத்தத்தை எதிர்த்தனர். லீகர்கள் உள்பட 12 பேர்தான் திருத்தத்தை ஆதரித்தனர். பாடீலின் “புண்ணிய கைங்கரியத்தால்” ரயில்வே தொழிலாளர்களின் பஞ்சப்படி கோரிக்கையை கார்ப்பொரேஷன் நிராகரித்தது.

பாடீல் எதிர்ப்பது கம்யூனிஸ்ட்களை மாத்திரமல்ல; தொழிலாளர் சமூகத்தையே என்பதற்கு வேறு என்ன ருஜு வேண்டும்? இந்த “பசுத்தோலைப் போர்த்த புலி” தான் பாட்டாளிமக்களைப்பற்றி முதலைக் கண்ணீர் வடிக்கிறது!

# ★ தேசபக்தன் டயரி ★

(தோழன்)

சர்க்காருடன், காங்கிரஸ் ஒத்துழைக்காமலிருக்கும் இச்சமயத்தில், யுத்த பிற்கால நிர்மாணக் கமிட்டிகளில் அங்கம் வகிப்பதன் மூலம் கம்யூனிஸ்டுகள் ஒத்துழைத்து வருகிறர்கள்.

பாரததேவி தலையங்கம் 17-12-44.

* * *

சென்னை கவர்னரால் நியமனம் செய்யப்பட்ட யுத்தபிற்கால சீரமைப்புக் கமிட்டியின் போக்குவரத்து சப்கமிட்டியில், சென்னை மேயர் ராதாகிருஷ்ண பிள்ளையும், கோவை ஜில்லாபோர்டு தலைவர் வி. கே. பழனிசாமி கவுண்டரும் அங்கத்தினர்களாக சேர்க்கப்பட்டனர். (இருவரும் காங்கிரஸ்வாதிகள்). 9-ம் தேதி கோட்டையில் கூடிய இக் கமிட்டியின் கூட்டத்தில் இருவரும் பிரசன்னமாயிருந்தனர்.

பத்திரிக்கைச் செய்தி.

* * *

சர்க்காரோடு ஒத்துழைக்கும் ஸ்ரீ ராதாகிருஷ்ண பிள்ளையால், அரியலூர் மகாநாடு ஆரம்பிக்கப்பட்டதனல், தமிழ்நாட்டு காங்கிரஸ்காரர்களுக்கே மானக்கேடான நிலைமை ஏற்பட்டுவிட்டதாம்! அதன் நடவடிக்கைகள் ஒன்றும் செல்லுபடியாகாதாம்! ஆகவே, சமீபத்தில், வேறொரு மகாநாடு நடத்த ஏற்பாடுகள் ஜரூராக நடைபெற்றுவருகின்றன. இந்த மகாநாடு ‘பாரததேவி’ ஆபீஸில் கூடும். ஸ்ரீமான் முத்துரங்க முதலியார் த. நா. கா. கமிட்டிக்குத் தலைவராக இருந்த காலத்தில், தமிழ்நாட்டில் நடக்கும் மகாநாடுகளுக்கு தலைமை வகிக்க வெளி மாகாணங்களிலிருந்து யாரையும் அழைக்கக்கூடாது என்று ஒரு தீர்மானம்நிறைவேற்றப்பட்டுள்ளதாம். அதையொட்டி, ‘பாரததேவி’ ஆபீஸில் நடைபெறும் மகாநாட்டிற்கு, ஆபீஸுக்கு வெளியிலிருந்து யாரையும் தலைமை வகிக்கக்கூப்பிடக் கூடாது என்று பேசிக்கொள்ளப் படுகிறது. தலைவர் பதவிக்கு, உதவி ஆசிரியர் அருணசலம் பெயரும், நிருபர் ராதாகிருஷ்ணன் பெயரும் தான் அடிபடுகின்றன. ஆனல், ராதாகிருஷ்ணன், நிருபர் ஆனபடியால், அநேகமாக அவருடைய வேலை, வெளியிலேயே இருக்கிறது. ஆகவே, அருணசலத்துக்குத்தான் ‘சான்ஸ்’ ரொம்ப இருப்பதாகக் கூறப்படுகிறது.

—“நமது விசேஷ நிருபர்”

* * *

மாஜி காங்கிரஸ் மந்திரி ஸ்ரீ சம்பூர்ணனந்தும், ஸ்ரீமதி உமாநேருவும் ஐக்கியமாகாண யுத்தபிற்கால நிர்மாணக் கமிட்டியில் அங்கம் வகிக்கின்றனர். ஐ. மா. காங்கிரஸ் சங்கத்தலைவர் தாண்டன் இதற்கு ஆதரவு கொடுத்திருக்கிறர்.

—அ. பி. செய்தி.

* * *

ஸ்ரீ சம்பூர்ணனந்தர் செய்துள்ள குற்றத்திற்காக அவரை 5 வருஷ காலத்திற்கு காங்கிரஸில் 4 அணு அங்கத்தினராகவும் சேர்க்கக்கூடாதென்றும், உமாநேருவின் குடும்பமே ஒரு வருஷத்திற்கு காங்கிரஸில் இருக்கக்கூடாதென்றும், ஒரு தீர்மானத்தை மேலேகூறிய மகாநாட்டில், பாரததேவி ஆபீஸ் பையன்களுள் ஒருவன் கொண்டுவரப் போவதாகத் தெரியவருகிறது.

—(ந. வி. நி.)

* * *

பொதுஜன நன்மைக்கான சர்வீஸ்கள் (போக்குவரத்து போன்றவைகள்), மூலாதாரமான தொழிற்சாலைகள் இவைகளெல்லாம் தனிப்பட்ட முதலாளிகளுக்குச் சொந்தமாயிருக்கக்கூடாது.

—காங்கிரஸ் கராச்சி திட்டம்.

* * *

9-ந் தேதியன்று போக்குவரத்துக் கமிட்டி கூட்டத்தில், மாகாணத்து பஸ் சர்விஸ், தனிப்பட்ட முதலாளிகளுக்குத்தான் சொந்தமாயிருக்க வேண்டும்; அவர்களாலேயே நடத்தப்படவேண்டும் என்று முடிவுசெய்யப்பட்டது. இதை எதிர்த்தவர்கள் ஸ்ரீ எஸ். குருசாமி, ஸ்ரீ எஸ். சிவராஜ். ஆதரித்தவர்கள் சென்னை மேயர் ராதாகிருஷ்ண பிள்ளை (காங்கிரஸ்வாதி), ஸிம்ப்ஸன் கம்பெனி, ராமா விலாஸ் பஸ் ஸர்விஸ் முதலிய கம்பெனிகளின் டைரெக்டர் எஸ். அனந்தராமகிருஷ்ணன், M. S. M. ரயில்வே ஏஜெண்டு ஸ்ரீ ஆர் டி. கே. மயனர்டு ஆகியோரும், இன்னும் 10 பேரும்.

* * *

கம்யூனிஸம் வராமல் தடுப்பதற்காக புதிதாகத் தோற்றுவிக்கப்பட்டுள்ள “காங்கிரஸ் சங்கத்தின்” நிரந்தர ஊழியர்களுக்கு பணக்காரர்கள் பண உதவி செய்யவேண்டும் என்று தமிழ்நாடு காங்கிரஸ் சங்கத்தின் செயலாளர் வேங்கடாசலபதி அரியலூரில் வேண்டுகோள் விடுத்தாரல்லவா? அந்த வேண்டுகோளை கவனிக்க ஸ்ரீ எஸ். அனந்தராமகிருஷ்ணன், மதுரை டி. வி. எஸ்., கோவை ஜி. டி. நாயுடு, முதலிய பஸ் முதலாளிகளெல்லாம் சமீபத்தில் கூடலாம் என்று தெரியவருகிறது.

—நமது விசேஷ நிருபர்.

### பொய் சொன்னுலும் பொருந்தச் சொல்!

ஆகஸ்ட் போராட்டத்தில் நம்பிக்கை துரோகம் செய்து, கவர்ன்மெண்டுடன் ஐக்கியமாகிவிட்டார்கள் கம்யூனிஸ்ட்கள்.

—ஒரு காங்கிரஸ் சங்க தலைவர்.

தேசத்தில் நடந்த சதிவேலைகளுக்கெல்லாம் ஜோஷியிஸ்டுகள்தான் காரணம்; சர்க்காரை இவர்கள் விஷயத்தில் ஜாக்கிரதையாயிருக்கும்படி எச்சரிக்கிறேன்.

—வி. எம். உபயதுல்லா,
மாகாண காங்கிரஸ் சங்க நிர்வாகி.

# ஆறுமாத வேலைத் திட்டம்

## ஸ்ரீ சிவஞான கிராமணி அறிக்கை

சென்னை முதல் சர்க்கிள் காங்கிரஸ் சங்கத் தலைவர் ஸ்ரீ ம. பொ. சிவஞான கிராமணி எழுதுகிறர் :—

காங்கிரஸ் நிர்மாணத்திட்டங்களை நிறைவேற்ற சங்கம் 6 மாதத்திட்டமொன்றை தயாரித்திருக்கிறது. இது ஜனவரி முதல் அமுலுக்கு வரும். 200 பேரடங்கிய தொண்டர் படை இதில் ஈடுபடுவர். ஆயிரம் ரூபாய் செலவாகுமென மதிப்பிடப் படுகிறது. இத்தொகையை உண்டி, டிக்கெட் நன்கொடை மூலம் பொதுமக்களிடமிருந்து வசூலிக்கப்படும்.

கதர் அபிமானிகள் தங்கள் ஆடைக்கு தாங்களே நூற்கும்படி தூண்டப்படுவர்.

ஹிந்துஸ்தானி வகுப்புகள், தமிழ் இலக்கிய வகுப்புகள், முதியோர் கல்விக்காக இலவசபாடசாலைகள் சர்க்கிளின் பல பகுதிகளில் ஆரம்பிக்கப்படும்.

ஹரிஜன சேவையில் கல்வி, சுகாதாரம் ஆகிய விஷயங்கள் உடனடியாக கவனிக்கப்படும்.

நகரங்களிலுள்ள பல்வேறு தொழிற்சங்கஸ்தாபனங்களிலும் சர்க்கிள் ஊழியர்கள் கலந்துகொண்டு தொழிலாளருக்கு பணிபுரிவர்.

அனதைப் பெண்களுக்கு நூற்றல், தையல் முதலிய தொழில்களில் பயிற்சி அளித்து ஜீவனத்திற்கு வழி செய்வதுடன் பொதுவாக பெண்களிடையே வாராந்திர கூட்டங்கள் நடத்தி உலகியல் அறிவுவளர்க்கப் படும். இவ்வேலைகளை பெண்கள் சப் கமிட்டி கவனிக்கும்.

ஹிந்து முஸ்லிம் ஒற்றுமைக்காக காந்திஜியின் சமரஸத்திட்டத்தை அடிப்படையாகக்கொண்டுபிரசாரம் நடத்தப்படும்.

உணவு பிரச்னையில் விசேஷ தொண்டர்படை வேலைசெய்யும். இவையல்லாமல் திட்டம் அமுலிலுள்ள ஆறுமாதங்களில் 20 பொதுக் கூட்டங்கள் நடத்தி அரசியல் கைதிகள் விடுதலை, இந்து-முஸ்லிம் ஒற்றுமை, தேசீய சர்க்கார்பற்றி கிளர்ச்சி செய்யப்படும்.

இத்திட்டத்தை நடைமுறைக்கு கொண்டுவர ஹரிஜனசேவா சங்கம், ஹிந்திபிரசார சபா, தமிழ் வளர்ச்சிக் கழகம், தொழிற்சங்க ஸ்தாபனங்கள் முதலியவற்றுடன் நெருங்கிய தொடர்பு வைத்துகொள்ளப் படும்.

இந்த ஆறுமாததிட்டம் வெற்றியடைய சர்க்கிள் வாசிகள் உதவி புரியுமாறு வேண்டுகிறேன்.

---

**அ. இ.**

**மாணவர் மகாநாடு**

ஜனவரி 28, 29, 30 தேதிகளில்

கல்கத்தாவில் நடைபெறும்

காங்கிரஸ் காரியக்கமிட்டி அங்கத்தினர்

ஸ்ரீமதி சரோஜினி நாயுடு,

வங்காள முஸ்லிம் லீக் காரியதரிசி

மௌல்வி அப்துல் ஹாஷீம்

முதலியோர் வாழ்த்துக் கூறுவார்கள்.

---

# ஸோஹன் சிங் ஜோஷ்

## காங்கிரஸ் கட்சி கொறடா

**1919-20** ஒத்துழையாமை இய்க்க காலத்திலிருந்து தேசீய இயக்கத்தின் முகப்பில் நிற்பவர் ஸர்தார் ஸோஹன் சிங் ஜோஷ். அகாலி இயக்கத்தின் அரும்பெரும் தலைவராயிருந்தவர். 1929-34 ல் நடைபெற்ற மீரட் கம்யூனிஸ்ட் சதிவழக்கில் குற்றம் சாட்டப்பட்டு தண்டனை பெற்றவர். இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் ஸ்தாபகர்களில் ஒருவர்.

1937-ல் பாஞ்சால சட்டசபைக்கு கம்யூனிஸ்ட் கட்சி டிக்கட்டில் நின்று தேர்ந்தெடுக்கப்பட்டார். சட்டசபையில் காங்கிரஸ் கட்சியின் அங்கத்தினர். அன்றுமுதல் இன்றுவரை, யூனியனிஸ்டுகளுக்கு ஸோஹன் சிங் என்றல் கிலிதான். அவர் பேசத் தொடங்கிவிட்டாலேயே, மந்திரிகள் திறுதிறுவென்று விழிப்பார்கள்.

இன்று, பாஞ்சால சட்டசபையில் காங்கிரஸ்-லீக் ஐக்கிய முன்னணி நிறுவப்பட்டதற்கு இவருக்கு பிரதான பங்கு உண்டு.

பாஞ்சால சட்டசபை காங்கிரஸ் கட்சி அவரை பிரதம கொறடாவாக தேர்ந்தெடுத்திருக்கிறது.

---

சென்னை டிராம்வேயில்

# தொழிலாளர்களின் தீர்ப்பு

## "சங்கத்தை சீர்குலைக்க இடங்கொடோம்"

சங்க விரோதிகளில் சிலர் டிராம்வேத் தொழிலாளர்களை- பிளவு படுத்துவதற்கு பிரயத்தனப்பட்டதையும் இவர்களுக்கு இந்த "கைங்கரியத்தில்" ருக்மணி லக்ஷ்மீபதி பின்பலம் தந்ததையும் நேயர்கள் அறிவார்கள். இதன்மூலம் பொது மக்களிடமும் யூனியனைப்பற்றி துஷ்பிரசாரம் செய்துவந்தார்கள்.

யூனியன் தேர்தல்கள் ஆகஸ்ட் மாதம்தான் நடைபெற்றது. பெருவாரியான வோட்டுகள் மூலம் நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். இப்பொழுதும் எத்தகைய நம்பிக்கை இல்லாப் பிரேரணையும் வரவில்லை. என்ருலும், இந்த பிளவு பிரசாரத்துக்கு பதில் அளிப்பதற்கு யூனியன், உபதலைவர்மீது நம்பிக்கை இருக்கிறதா இல்லையா என்பதை பாலட் மூலம் வோட்டெடுக்க முன் வந்தது.

பாலட் நடந்தால், தங்கள் குட்டு வெளிப்பட்டுவிடும் என்பதை சங்க விரோதிகள் கண்டுகொண்டனர். சாயம் வெளுத்துவிடுமே என்று, பாலட்டை பகிஷ்கரிக்கப்போவதாக அறிவித்தனர். இதற்கு ஒரு நொண்டிச்சாக்கும் பகன்றனர். என்ன தெரியுமா? தலைவர் வெங்கடசாமி நாயுடு சங்க விரோதிகளின் பொய்ப் பிரசாரத்தை அம்பலப்படுத்தி ஒரு அறிக்கை விடுத்தது தவரும்! இதன் மூலம் இவர் நடுநிலைமையிலிருந்து வழுவி விட்டாராம்! யூனியன் தலைவர் யூனியன் நிர்வாகிமீது சுமத்தப்படும் அபாண்டமான அவதூறுகளுக்கு பதிலளிப்பது முறைப் பிசகா?

### லக்ஷ்மீபதியின் பொய்ச்சரடு

"வெங்கடசாமி நாயுடுவே தேர்தல் அதிகாரியாயிருக்கிருர்; அவர் கணேசனுக்கு பரிவுகாட்டுகிருர். அதனல் தேர்தல் ஒரு தலைப் பட்சமாக இருக்கும்" என்று தோற்றுப்போன சங்க விரோதிகளுக்கும் ராயிஸ்டுகளுக்கும் வக்காலத்து வாங்கிப் பேசுகிருர் லக்ஷிமிபதி அம்மையார்.

ஆழம் தெரியாமல் காலைவிடுவதில் லக்ஷிமிபதி அம்மாளுக்கு மோஹம் போலும்! தேர்தல் அதிகாரி, தலைவர் வெங்கடசாமி நாயுடுவல்ல; தேர்தல் அதிகாரிகள், சங்கத்துடன் சாஸ்திரத்துக்குகூட சம்பந்தமில்லாத வக்கீல்கள் கிருஷ்ணமூர்த்தியும் ஆர். வெங்கடராமனும். விஷயம் தெரியாமல் வாயில் வந்ததையெல்லாம் பேசுவானேன்?

ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியும் வெங்கடராமனும்(லக்ஷிமிபதியின்)காங்கிரஸ் சங்கத்தின் அங்கத்தினர்கள். வெங்கடராமன் 42ல் கைதி செய்யப்பட்டு பாதுகாப்பு கைதியாக இருந்தவர். கிருஷ்ணமூர்த்தி அரியலூரில் மகாநாட்டிலிருந்து நேராக, வீட்டுக்கு கூடப்போகாமல், தேர்தலுக்கு வந்தார்.

"சங்க விரோதிகள்தான் பகிஷ்கரிக்கப் போவதாக சொல்லிவிட்டானுகளே! எதற்கு வோட்டுபோடப் போகணும்" என்று தொழிலாளர்கள் கருதினுர்கள். எனினும், 1700 சங்க அங்கத்தினர்களில் 889 பேர் வோட் செய்தனர். அதில் 875 பேர் கணேசனிடம் நம்பிக்கை தெரிவித்தனர். 14 பேர்தான் எதிர்த்து வோட்டு செய்தனர்.

### புத்தி தெளிவு வேண்டும்

லக்ஷிமிபதிக்கு இப்பொழுதாவது புத்தித் தெளிவு ஏற்படவேண்டும். இந்த "அனுபவத்தீயில்" "ஆத்ம சோதனை" செய்துகொண்டால், சங்கத்தை உடைக்கப் பார்ப்பவர்கள், தேர்தல்களில் தோற்றுப்போய் அதிருப்திப்பட்டுக் கிடப்பவர்கள், ராயிஸ்ட்கள் முதலியோர் குழாத்தில் சேர்வதின் அபாயத்தை கிரஹிக்க முடியும்.

பாட்டாளி மக்களுக்கு சேவை செய்யவேண்டுமென்று லக்ஷிமிபதிக்கு உண்மையான சிரத்தை உண்டாருல், தொழிலாளர்களின் கோரிக்கைகளுக்காக ஆதரவு தேட முன் வரவேண்டும்.

### சங்கத்தின் கடமை

டிராம்வே தொழிலாளர்கள் யூனியன் விரோதிகளுக்கு ஒரு நல்ல சவுக்கடி கொடுத்துவிட்டனர். இது போதாது. இந்த குலத்தை கெடுக்க வந்த கோடாரிக்காம்புகள் இருந்த இடம் தெரியாமல் மறையவேண்டும். மீண்டும் மீண்டும் யூனியனை நாசப்படுத்த அவர்கள் எவ்வித முயற்சியும் செய்யும்படிவிடாமல், அவர்களை தனிமைப்படுத்தவேண்டும். டிராம்வே தொழிலாளர் சமூகம், பகிஷ்காரமும் வெறுப்புமே இந்த விரோதிகளுக்கு விதிக்கக் கூடிய தண்டனை.

---

## குற்றம் மறைக்க குற்றம்

ஆசிரியர் அவர்களுக்கு,

பொன்மலை.

தோழரே,

பாயிலர் ஷாப் தொழில்ளாளர்களாகிய நாங்கள் இன்ஜின் டெண்டர்களிலுள்ள கரிமண்ணிலிருந்து கரித் துண்டுகளைப் பிரித்தெடுத்து சேமிக்கிருேம். இப்படி சேகரித்த கரி சுமார் 2½ டன் இருக்கும். இதற்கு முன் இந்த மண்ணை கொட்டிவிடுவதுதான் பழக்கம்.

பாயிலர் ஷாப் அஸிஸ்டண்ட் போர்மென் குஞ்சிதபாதமய்யரின் ஆட்கள் சிலர் சார்ஜ்மென் கொடுத்த வேலையைச் செய்ய மறுத்துவிட்டார்கள். உற்பத்தி கமிட்டியால் உத்ஸாகப்படுத்தப்பட்டு இதரர் தங்கள் வேலைகளை திறமையாக செய்யும் போது, அதிகாரியின் கையாட்கள் இவர்களை ஏளனம் செய்துகொண்டு சுற்றித் திரிகிருர்கள்.

இச் செய்கையை போர்மென்னிடம், சார்ஜ்மென் ரிப்போர்ட்எழுதிக் கொடுத்தும் அவர் விசாரிக்கவில்லை. சுமார் 45 டெண்டர் ஷாப் தொழிலாளிகள் கையெழுத்திட்ட மகஜர் ஓர்க்ஸ் மானேஜருக்கு அனுப்பியும் அவர்விசாரிக்கவில்லை. வேலைசெய்ய மறுத்த தொழிலாளிகளை தினசரி பதிவு செய்யும் ஓர்க் ஆடரில் பதிவு செய்யாமல், சார்ஜ்மென் ஓர்க்ஸ் மேனேஜருக்கு ரிப்போர்ட் செய்திருக்கிருர்.

ஆனல் அஸிஸ்டெண்ட் போர்மென் தன் கையாட்களுக்கு உதவிபுரியும் நோக்கத்துடன் சிபார்சு செய்ததின் பேரில், ஆடிட் டிப்பார்ட்மெண்ட், இணங்கிவேலைசெய்யாதவர்களுக்கு, பல தினங்கள் கழித்து ஓர்க் ஆர்டர் பதிவு செய்திருக்கிறது. இவ்விதம், குற்றத்தை மறைக்க குற்றம் செய்வது உற்பத்திக்கு குந்தகம் செய்யும் சூழ்ச்சி.

இன்று போக்கு வரத்தை திறம்பட நடத்துவது சகலருடைய கடமையாகும். இதை அதிகாரிகளும் உணர்ந்து தொழிலாளர்களின் யோசனைகளை பரிசீலனை செய்து இருசாராரும் ஒத்து திட்டமிட்டு வேலை செய்ய வேண்டும்.

ஒரு தொழிலாளி.

---

## ஜனசக்தி பிரசுராலயம்

ஏஜெண்டுகள் கவனிக்க!

1945 ஜனவரி முதல், கமிஷன் 25./. விருந்து 12½./. ஆகக் குறைக்கப்படும். நம் பிரசுரங்களை விரிவான அளவில் விநியோகிக்க வேண்டும், என்ற நோக்கத்துடன், விலையை கூடுமானவரை குறைத்து நிர்ணயிக்க முடிவுசெய்துள்ளோம்; இதை செய்ய வேண்டுமானுல், கமிஷனை குறைப்பதை தவிர வேறு வழியில்லை. "கம்யூனிஸ்டுகளும், காங்கிரஸும்" என்ற பிரசுரத்திலிருந்து தான் இந்த 12½./. கமிஷன்; இதற்கு முன் வெளியிடப்பட்ட பிரசுரங்களுக்கு வழக்கம்போல் 25./. கமிஷன் தரப்படும்.

கமிஷன் பெறும் ஏஜெண்டுகள் தான் ரயில்வே பார்சல் செலவையும், தபால் செலவையும் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

"ஜனசக்தி" ஏஜெண்டுகளுக்குக் கொடுப்பதைப் போல், "ஜனசக்தி பிரசுராலய" ஏஜெண்டுகளுக்கு, மூன்று மாதத்திற் கொருமுறை போனஸாக 12½./. கொடுக்கப்படும். மூன்று மாத காலத்தில் பாக்கி பூராவையும் குறித்த தேதியில் செலுத்தியுள்ள ஏஜெண்டுகளுக்குத்தான் இந்தப் போனஸ் அளிக்கப்படும்.

---

பி. அண்டு ஸி.

# மில் நிர்வாகத்தின் சூழ்ச்சி

## தொழிலாளியின் கடிதம்

*பி. அண்ட் ஸி. மில் வைண்டிங் டிப்பார்ட்மெண்டிலிருந்து டிஸ்மிஸ் செய்யப்பட்ட ஒரு தொழிலாளி எழுதிய கடிதம் இது. அவர் பெயரை கொடுக்காமலிருப்பதின் காரணத்தை வாசகர்களே ஊகித்துக்கொள்ள முடியும். கடிதத்தின் வாசகத்தை மாத்திரமே கொஞ்சம் மாற்றியிருக்கிறோம்.*

ஐயா!

நான் சில வருஷங்களாக பக்கிங்ஹாம் கர்நடிக் மில்லில் வேலை செய்து வருகிறேன். திடீரென்று நேற்றுதினம் எனக்கு சீட்டுக்கொடுத்துவிட்டார்கள். என்னுேடுகூட, 76 தொழிலாளிகளுக்கும் சீட்டு. ஆனல் நாங்கள் எந்தவிதமான குற்றமும் செய்ததாகக் கூறப்படவில்லை.

இதற்குக் காரணம் என்ன?

எங்கள் மில்லில் துணி உற்பத்தியாவதை எல்லோரும் அறிவார்கள். மில்லுக்குள்ளே பல டிபார்ட்டுமெண்டுகள் உள்ளன. முதலில் பல வகைப்பட்ட பஞ்சை ஒன்ருகச் சேர்த்து, பிறகு, அதை அரைத்து, பஞ்சை அடித்து, பட்டைபோட்டு, பட்டைபோட்ட பஞ்சை கொஞ்சம் கொஞ்சமாக ஸன்னமாக ஆக்கி, கடைசியில் நூலாக நூற்று கண்டையில் சுற்றப்படும். இது ஒவ்வொன்றும் தனித்தனியான டிபார்ட்மெண்டில் செய்யப்படும் வேலை.

நூற்கப்பட்ட நூலில், ஒரு பகுதியை பாவு போடுவார்கள். மற்றப் பகுதியை, இடை நூலாக உபயோகித்து, துணியாக தரிகளில் நெய்யப்படும்.

பல ஆயிரக் கணக்கான தரிகள் இந்த மில்லில் இருக்கின்றன. இந்தியாவிலேயே, இந்த மில்தான் மிகவும் பெரியது என்று சொல்லிக்கொள்ளுகிருர்கள்.

சாதாரணமாக, தரியில் வேலை செய்யும் தொழிலாளிகள், 2 தரி, 4 தரிகள் வரையில் வேலைசெய்து வருவார்கள். இந்தியாவிலேயே எங்கும், 4 தரிக்குமேல் பார்ப்பது கிடையாது.

ஆனல், 1942ல், இந்த நிர்வாகம், சில பேர்களுக்கு ஆசை வார்த்தை காட்டி, 12 தரி பார்க்கச் சொன்னது. அவர்களுக்கு ஒரு கண்டைக்காரர் என்ற ஹெல்பரையும் கொடுத்தது. ஆரம்பத்தில், வேலைசெய்ய வந்தவர்களையெல்லாம், மேஸ்திரிகளாக ஆக்கியது. இம்மாதிரி செய்து மற்ற தொழிலாளிகளை இழுக்க முயற்சித்தது.

சென்ற 1 வருஷகாலமாக, பல லைன்கள் பூராவிலும், 12 தரிவிடும் முறையையே அமுலுக்கு கொண்டு வந்தது.

அதோடு நிற்காமல், அடிப்படை கூலித்திட்டம் என்ற பேரால், கூலி விகிதத்தையும் குறைத்துவிட்டது.

இந்த முறையினுல், தொழிலாளிகள் மிகவும் கஷ்டப்படுகின்றனர். அதுவும், பாவுகளுக்குப் போடும் கஞ்சிக்குவேண்டிய அரிசி, மரிகன் மாவு முதலியவை கிடைக்காததால், புளியங்கொட்டையைக் காய்ச்சி பாவு போடப்படுகிறது. இதனுல், அடிக்கடி நூல் அறுந்து, மெஷின்கள் நின்று விடுகின்றன. தொழிலாளிகளுக்கு அதைச் சரிப்படுத்தி, மெஷினை ஓட்டுவது மிகவும் கஷ்டமாயிருக்கிறது. வீட்டிற்கு வந்தவுடன், அயர்ந்து சோர்ந்து படுத்து விட வேண்டியிருக்கிறது.

எவ்வளவோ முயற்சி செய்தாலும், வேலை சரிவரமுடியவில்லை. இந்த நிலைமையில், சென்ற 1 மாதமாக, வேலை சிறிது மந்தமாக இருந்துவருகிறது. தறிகளில் துணி போதிய அளவு உற்பத்தியாகாததால், அதற்கு சப்ளை செய்யும் மற்ற டிபார்ட்மெண்டுகளில் உள்ள எங்களுக்குப் போதியவேலை இல்லை என்று சொல்லி, எங்களை வீட்டிற்கு அனுப்புகிறது மானேஜ்மெண்ட்.

மானேஜ்மெண்டின் 12 தறி முறையில் அதற்கு நிரம்ப லாபம் உண்டு. சாதாரணமாக, 12 தறிகளை 3 தறிக்காரர்களைக்கொண்டு பார்ப்பதற்குப் பதிலாக, 1 தறிக்காரனையும், 1 ஹெல்பரையும்கொண்டு பார்க்கச் சொல்லுகிறது. இதனுல், மொத்தத் தொழிலாளிகளில் மூன்றில் ஒரு பங்கு குறைவாக இருந்துகொண்டே வேலைநடக்கும். அவர்களுக்குக் கொடுக்கவேண்டிய பஞ்சப்படியை மிச்சப்படுத்துகிறது. இதனுல் மேலும், ஹெல்பர்களும், தறிக்காரர்கள் செய்யும் அதே வேலையைச்செய்தபோதிலும், அவர்களுக்குக் கூலி விகிதம் குறைவு. தறிக்காரருக்கு 1 ரூபாய் கூலி என்ருல், இவர்களுக்கு 9 அணுத்தான். இந்தக் கூலி எப்படி நிர்ணயம் செய்யப்பட்டதென்பது யாருக்கும் தெரியாது.

நேர்மையாக, இந்தப் பிரச்சினையைத் தீர்ப்பதற்கு பதிலாக, மற்ற டிபார்ட்மெண்டிலுள்ளவர்களை டிஸ்மிஸ் செய்வதன் மூலம் தீர்க்க மானேஜ்மெண்டு முயற்சி செய்கிறது.

மானேஜ்மெண்டின் சூழ்ச்சியை நாங்கள் அறிவோம். தரிக்காரர்களின்மீது எங்களுக்குக் கோபமும், ஆத்திரமும் ஏற்படுத்த அது இந்த முறையைக் கையாளுகிறது.

ஆனல், அந்த சூழ்ச்சிக்கு இரையாகாமல் இருக்கும்படி, நான் மற்ற தோழர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

சங்கம், இது வரையில், இந்தப் பிரச்சினை 12 தறிக்காரர்களுக்காக மட்டும் ஏற்பட்ட பிரச்சினை என்றே நினைத்து வந்தது. ஆனல் இதை ஒரு பொதுப் பிரச்சினையாக மாற்றி எல்லா தொழிலாளிகளையும் ஒன்று திரட்ட முன்வர வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். நானும், மற்ற டிஸ்மிஸ் செய்யப்பட்ட தொழிலாளிகளும், இதற்காக பரிபூரணமாக ஒத்துழைக்கத் தயார் என்று உறுதி கூறுகிறோம்.

டிஸ்மிஸ் செய்யப்பட்ட
ஒரு தொழிலாளி.

---

# தொழிற்சங்க தாத்தாவுக்கு கார்ப்பொரேஷன் வரவேற்பு



அ. இ. தொ. காங்கிரஸுக்கு, பந்தக்கால் நாட்டியதுமுதல் பொதுக் காரியதரிசியாயிருந்து வரும் 'தாதா' என். எம். ஜோஷி.

தோழர் என். எம். ஜோஷியைத் தெரியாத தொழிற் சங்கவாதி இந்தியாவில் இல்லை. இந்தியத் தொழிற் சங்க இயக்கத்தை ஸ்தாபித்த, 'தாத்தா' என்று பண்டித ஜவஹர்லால் நேரு தன்னுடைய சுய-சரிதையில், அன்னுருக்கு மரியாதை செலுத்துகிருர். அகில இந்திய தொழிற் சங்க காங்கிரஸை ஸ்தாபித்தவர்களுள் முன்னணியில் நிற்பவர். 1918 முதல், இன்று வரை, தொழிற் சங்க இயக்கத்தின் முன்னணியில் நிற்கிருர்.

மத்திய சட்ட சபையில், 1921 வருஷம் முதற்கொண்டு அங்கத்தினராக இருந்து வருகிருர். தொழிலாளர் நலன்களை பாதிக்கக்கூடிய எந்த மசோதா வந்தாலும், உடனே தோழர் ஜோஷி கர்ஜிப்பதைக் கேட்கலாம். இந்த 24 வருஷங்களாக, அசெம்பிளியில், எத்தனை போராட்டங்களை நடத்தி யிருக்கிருர்!

தொழிலாளர் பிரச்சினைகளில் மாத்திரமல்ல, தேசீயப் பிரச்சினை ஒவ்வொன்றிலும், பொது ஜனங்களின் நலன்களுக்காகவே பாடுபடுபவர். தேசீய சர்க்காருக்காக, தலைவர்களின் விடுதலைக்காக, அரசியல் கைதிகள் சிறைகளுக்குள் கண்ணியமாக நடத்தப்பட வேண்டுமென்பதற்காக, எவ்வளவு போராடி யிருக்கிருர்?

தோழர் ஜோஷி எந்தக் கட்சியிலும் சேராதவர். ஆயினும், சர்வ கட்சியையும் சேர்ந்தவர்கள் அனைவரின் மதிப்பையும் பெற்றவர்.

சர்வதேச தொழிற்சங்க இயக்கத்திலும் ஜோஷிக்கு பெரிய பங்கு உண்டு. சர்வதேச தொழிலாளர் ஸ்தாபனத்தில் அவர் ஒரு ஸ்தாபக அங்கத்தினர்,

அகில இந்திய தொழிற்சங்க காங்கிரஸை நினைக்கும்போது, தோழர் என். எம். ஜோஷியின் பெயர்தான் உடனே ஞாபகத்துக்கு வரும். அவரைத் தவிர வேறுயார்தான், இவ்வளவு நீண்டகாலமாக, இந்த ஸ்தாபனத்தின் பொதுக் காரியதரிசியாக இருக்கமுடியும்? அதே சமயத்தில் அனைவரின் ஆதரவையும், மதிப்பையும் பெறமுடியும்?

ஜனவரி 18 லிருந்து 23 தேதி வரை சென்னையில் அ. இ. தொ. காங்கிரஸ் கூடுகிறது. அந்த சந்தர்ப்பத்தில், சென்னை கார்ப்பொரேஷன், சென்னை மக்களின் சார்பாக, தோழர் என். எம். ஜோஷிக்கு, வரவேற்பளிப்பதாக தீர்மானித்திருக்கிறது. தமிழ்நாட்டு மக்கள் யாவரும் இதை வரவேற்பார்கள்.

---

# ராமவிலாஸ் சர்வாதிகாரம்

## பிரபலஸ்தர்கள் கண்டனம்

ராமவிலாஸ் பஸ் நிர்வாகம் சர்வாதித்தை நிறுத்தவேண்டும். (இதைப்பற்றி ஜனசக்தி 25-10-44ல் எழுதியிருக்கிருேம்) சங்கத்தில் சேர்ந்த காரணத்திற்காக 24 பேரை டிஸ்மிஸ் செய்வது எவ்வளவு அநீதி! முறை வரையில்லாமல் நடக்கிறது ராமவிலாஸ் பஸ் கம்பெனி.

டிஸ்மிஸ் செய்யப்பட்ட பஸ் தொழிலாளிகள் என்ன செய்தனர்? பொதுஜன ஆதரவை தேடவேண்டும். ஏனென்ருல் பொது ஜனங்களை பாதிக்கும் விஷயம் இதுவென எழுதினேம். சங்கத்திலும், பொது ஜனங்களிடமும் நம்பிக்கைகொண்ட தொழிலாளிகள் இதைச் செய்து வருகின்றனர்.

இவ் விருபத்துநாலு தொழிலாளிகளும் சங்கச் செங்கொடி யேந்தி, நாகப்பட்டணம், மாயவரம், திருவாரூர், முத்துப்பேட்டை, பட்டுக்கோட்டை முதலிய விடங்களிலும் பாதை பூராவும், கால் நடையாக சுமார் 150 மைல் நடந்து ராமவிலாஸ் அடக்குமுறை, போக்குவரத்து நிலைமையை எவ்வாறு பாதிக்கிறது என்பதை விளக்கியுள்ளார்கள்.

திருத்துரைப்பூண்டி செக்ஷன் பூராவுக்கும் இக்கம்பெனிக்கு ஏக போக உரிமை. இதில் இல்லாத பொல்லாத காரணங்களைக் காட்டி பஸ்ஸை குறைத்து ஓட்டி கொள்ளை லாப மடிக்கிருர்கள். தொழிலாளிகளுக்கு முழுநாள் வேலை யில்லை. பிரயாணிகளுக்கு குறிப்பிட்ட நேரத்தில் வண்டிகிடைப்பதில்லை. தொழிலாளிகள், இந்த சுயநலத்திட்டத்தை பகிரங்கப்படுத்துவதைக் கண்டு சங்கத்தை உடைக்க முனைந்து நிற்கிறது நிர்வாகம்.

ஆனல் ஜனங்கள் தொழிலாளிகளை ஆதரித்து வரவேற்கின்றனர். இவர்கள் இந்நிலைமை சீர்திருந்த திட்டங்களுடன் ஒரு விஞ்ஞாபனம் தயார் செய்து கையெழுத்து வாங்கி வருகின்றனர். இந்த ஜில்லாவிலுள்ள 1,000க்கு மேற்பட்ட பிரபலஸ்தர்கள் கையெழுத்திட் டிருக்கின்றனர்.

நிற்க, பாதிக்கப்பட்ட தொழிலாளிகள் 50 மைல் திருத்துரைப்பூண்டியிலிருந்து நடந்து, தஞ்சை சென்று கலெக்டரைக் கண்டனர். தான் எதுவும் செய்வதற்கில்லை யென்றும் நீங்கள் ஏன் போக்கு வரத்துக்குக் கவலைப்பட வேண்டும், டிராபிக் போர்டு கவனித்துக்கொள்ளும் என்றும் சொன்னுராம். தொழிலாளிகளின்றி போக்குவரத்து யாரால் சீர்படுமோ? அவரைத்தான் கேட்க வேண்டும். விஞ்ஞாபனம் கையெழுத்துக்களுடன் அரசாங்கத்திற்கு சீக்கிரத்தில் அனுப்பப்படுமென சங்கம் நமக்கு தெரிவிக்கிறது. தொழிலாளிகள் தொடர்ந்து பொதுஜன ஆதரவைத் திரட்டுவதே அரசாங்கத்தை தலையிடச் செய்யும் ஒரே வழி!

# ஊருக்கு பல சங்கமெனில் லாபமடைவது யார்?

## ஜவஹர் கூறியதென்ன? ரங்கா செய்வதென்ன?

[இம்மாத ஆரம்பத்தில் அகில இந்திய விவசாயிகள் சங்கத்தின் மத்திய கவுன்சிலின் கூட்டம் கல்கத்தாவில் நடந்தது. அங்கு நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களில் சில, நம் மக்களில் பெரும்பாலோரின் வாழ்க்கையை பாதிக்கும் முக்கியமான பிரச்னைகளைப் பற்றியது. எந்த இந்தியனும் அவற்றை கவனிக்காமல் அலக்ஷியம் செய்ய முடியாது. அவற்றைக் காரியாம்சத்தில் நிறைவேற்றுவதனால், வளர்ந்துவரும் பேராபத்தைத் தவிர்க்க முடியும் என உறுதியுடன் நம்புகிறோம்.]

இன்று தேசம் உள்ள நிலைமையை நாம் திரும்பத் திரும்ப எடுத்துக்கூற வேண்டியதில்லை. உங்கள் ஒவ்வொருவருடைய தினசரி வாழ்க்கை அனுபவமே போதும். அரசியல் ஸ்தம்பிப்புப் பொருளாதார சீரழிவையுண்டாக்கி யிருக்கிறது. அதிக விலை, சாமான்கள் அகப்படாமை, கள்ளமார்க்கெட், முதலியவை வளர்ந்துள்ளன. இதனால் பஞ்சம், சொறி, சிரங்கு போன்ற வியாதிகள்; எதன்மேலும் வெறுப்பு ஏற்படக்கூடிய முறையில் மனச்சோர்வு

"பிள்ளையாரை பிடிக்கப்போய் குரங்காய்" முடிந்த கதையாகிவிடக்கூடாது; இந்த கஷ்டத்தை நிவர்த்திக்க செய்யப்படும் முயற்சி கண்ணை மூடிக்கொண்டு காரியத்தை செய்தால் இவ்விதம்தான் நடக்கும்.

நம் நாட்டில் பெரும்பாலான மக்கள் வேளாண்மை செய்து, கிராமங்களில் வசிக்கிறார்கள். இவர்கள் வாழ்க்கையில் ஏற்படும் முன்னேற்றமே, தேசத்தின் முன்னேற்றத்திற்கு அறிகுறியாக இருக்கும். இவர்களிடையே ஏற்படும் அரசியல், பொருளாதார, சமூக உணர்ச்சி தேசத்தின் சுதந்திரத்தை அடைவதற்கு வஜ்ராயுதமாக இருக்கும். இவர்களின் தேசபக்தி தட்டி எழுப்பப்படுமானால், நாம் கனவிலும் கண்டறியாத மாபெரும் செயல்களை சாதிக்கலாம்.

இன்று கஷ்ட காலம். நல்லகாலம் பிறக்க வேண்டுமானால் இந்த கிராம விவசாய மக்களின்பால் மறைந்து கிடக்கும் சக்தியை முடுக்கிவிட வேண்டுமென்பது வெட்ட வெளிச்சம்.

### விவசாயசங்க தீர்மானம்

இந்த மக்களின் ஏகப்பிரதிநிதித்வம் வாய்ந்த ஸ்தாபனமாகிய அகில இந்திய விவசாயிகள் சங்கம் கீழ்கண்ட தீர்மானத்தை நிறைவேற்றியிருக்கிறது.

"காங்கிரஸ் ஸ்தாபனத்தை புனர் நிர்மாணஞ்செய்து பலப்படுத்தும் திட்டத்தில், விவசாயிகளை சங்கங்களின் மூலம் ஒன்றுபடுத்துவதை காங்கிரஸ்காரர்கள் ஒரு பகுதியாக அமைத்துக்கொண்டிருக்கிறார்கள். அகில இந்திய விவசாயிகள் சங்கம் இதை வரவேற்கிறது.

"ஆதலின், விவசாயிகளின் முன்னேற்றத்திற்காகப் பாடுபட விரும்பும் காங்கிரஸ்காரர்கள், விவசாயிகளின் ஏகப்பிரதிநிதித்வ ஸ்தாபனமாகிய அகில இந்திய விவசாயிகள் சங்கத்தில் சேர்ந்து, அதன்மூலம் சேவைசெய்வதே இயற்கை. ஆனால் அகில இந்திய விவசாயிகள் சங்கத்தின் கொள்கையையும், பிரசாரத்தையும், நடவடிக்கைகளையும் காங்கிரஸ்காரர்களிடம் திரித்துக்கூறி, போட்டி சங்கங்களை ஆரம்பிக்க சிலர் முயற்சித்து வருகிறார்கள்.

"சென்றவருடம் நடந்த அகில இந்திய விவசாயிகள் மகாநாட்டில், சங்கத்தின் கொள்கையைவரையறுத்து நிறைவேற்றப்பட்டிருக்கும் தீர்மானத்தை கவனிக்கும்படி ஒவ்வொரு காங்கிரஸ்காரரையும் கேட்டுக்கொள்கிறோம். சங்கத்திற்கு எதிராக இவ்விதமாக செய்யப்பட்ட பல துஷ்பிரசாரங்களுக்கு அதில் பதில் கூறப்பட்டிருக்கிறது. போட்டிச் சங்கம் ஆரம்பிப்பதென்றால் தேசத்திற்கே பெரிய தீங்கை விளைவிப்பதாகும்.

"சொல்லொணா துயரைத் தாங்கி, கணக்கற்ற தியாகங்களை செய்து தாங்கள் நிர்மாணித்திருக்கும் தங்களுடைய ஸ்தாபனத்தை அழித்து, தங்களுடைய ஒற்றுமையை சீர்குலைக்க செய்யப்படும் முயற்சியாகவே விவசாயிகள் இதை கருதுவார்கள்.

"விவசாயிகள் சங்கத்தின் கொள்கையும் திட்டமும் பரந்த நோக்கத்தைக்கொண்டது. சுதந்திரத்தை நேசிக்கும் ஒவ்வொருவருக்கும் அதில் இடமுண்டு. எந்த அரசியல் கட்சியைச் சேர்ந்தவராக இருந்தபோதிலும், விவசாயிகளின் லக்ஷியத்திற்காக சங்கத்தில் சேர்ந்து சேவை செய்யலாம். நிலச்சுவான்தாரி முறை, நிலப்பிரபுத்வ ஒடுக்குமுறை, பண்ணையாட்களை அடக்கும்முறை போன்றவற்றை ஒழித்தால்தான், விவசாயிகள் கௌரவமான முறையில் மனிதர்களாக வாழமுடியும், தேச புனருத்தாரணத்திட்டம் வெற்றியடைய முடியும். எல்லாமக்களுடைய வாழ்க்கை நிலை உயர்வடைய முடியும். இதுவே விவசாயிகள் சங்கத்தின் கோரிக்கைகள்"

இதன் பின்பு, இந்தத் தீர்மானம் விவசாயிகள் சங்கத்தின் கொள்கையையும், திட்டத்தையும், சாதனைகளையும் தெளிவாகத் திரும்பவும் கூறுகிறது. கிராமங்களில் பஞ்சம், தொத்து நோய் முதலியவற்றை எதிர்த்தும், விளைபொருள்களுக்கு நியாயமான விலையைக் கோரியும், உணவுப் பொருள் உற்பத்தியைப் பெருக்கவும், அதிகாரவர்க்கத்தின் பல்வேறு தடைகளுக்கு எதிராக எவ்விதம் வேலை செய்துவருகின்றது என்று கூறுகிறது. கடைசியாக, "நிலச்சுவான்தார்கள் அதிகார வர்க்கம், முதலியவர்களுடைய ஒடுக்குமுறையை எதிர்த்துப் போராடி, தங்களுடைய ஒன்றுபட்ட முயற்சியால் தங்களைத் தங்களே காப்பாற்றிக் கொள்ளுவதுடன், மற்ற எல்லா ஜனங்களையும் அத்தகைய பகீரத முயற்சிக்குத் தூண்ட முடியும் என்ற நம்பிக்கையை விவசாயிகளுக்கு ஊட்டுகிறது. ஆதலில், எல்லா அரசியல் கட்சியைச் சேர்ந்த தேசபக்தர்களையும் விவசாயிகள் சங்கத்தில் சேர்ந்து சேவை செய்யவோ, அல்லது நடைமுறை வேலையில் இந்த கஷ்டகாலத்தில் உதவி செய்து பெரிய இயக்கத்தைக் கூட்டும்படிக் கேட்டுக்கொள்கிறது. இவ்விதம் கட்டப்படும் இயக்கம் தேச விடுதலையில் பெரும்பணியாற்றும் என்பதில் சந்தேகமில்லை. இந்தத் தீர்மானத்திலுள்ள வேண்டுகோளைப்பற்றி ஆழ்ந்து சிந்திக்கும்படி ஒவ்வொரு தேச பக்தரையும் கேட்டுக் கொள்கிறோம்.

### தனிச் சங்கம் பிளவுபடுத்தும்

விடுதலையான காங்கிரஸ்காரர்கள் காந்திஜியின் நிர்மாணத் திட்டத்தை நிறைவேற்றுவதில், விவசாயிகளிடையே வேலை செய்வதை ஒரு அம்சமாகத் தீர்மானித்து வருகிறார்கள். பேராசிரியர் என். ஜி. ரங்கா போன்றவர்கள் வெளியிட்டிருக்கும் அறிக்கைகளிலிருந்தும், பிரசங்கங்களிலிருந்தும் தெரிவதென்னவென்றால், காங்கிரஸை பலப்படுத்த விவசாயிகள் ஸ்தாபனங்களை காங்கிரஸின் ஒரு பகுதியாக்க வேண்டுமென்பதே. அதாவது சர்க்கா சங்கம், கிராமக் கைத்தொழில் சங்கம்போல், விவசாயிகள் சங்கத்தையும் காங்கிரஸின் ஒரு பகுதியாக அமைக்க வேண்டும் என்று கூறுகிறார்கள். காங்கிரஸில் அங்கத்தினராக இருப்பவர்கள்தான் விவசாயிகள் சங்கத்தில் இருக்க வேண்டும்; விவசாயிகளுக்கு அவர்களுடைய வர்க்கக் கொடியான செங்கொடி கூடாது, என்று கூறுகிறார்கள்.

இதனால் விவசாயிகள் இயக்கத்தை அவர்கள் பலப்படுத்துகிறார்களா? அல்லது அழிக்கிறார்களா? எந்தக் கட்சியைச் சேர்ந்தவரானாலும், சேர்ந்து சேவைசெய்து தங்கள் வர்க்க நலனைப்பாதுகாக்க அமைக்கப்பட்டு இருக்கும் ஸ்தாபனம் அகில இந்திய விவசாயிகள் சங்கம். அதற்கு எதிராககாங்கிரஸ்காரர் கட்சிக்குமட்டும் தனி விவசாயிகள் சங்கம் என்று அமைத்தால், மற்ற கட்சியினர் சும்மா இருப்பார்களா? முஸ்லிம் லீகர்கள் 'முஸ்லிம் விவசாயிகள் சங்கம்' என்றும் ஹிந்துமகாசபையினர் 'ஹிந்து விவசாயிகள் சங்கம்' என்றும் அமைக்க முற்பட்டால் விவசாயிகள் ஒற்றுமை என்னவாகும்? ஒவ்வொரு கிராமத்திலும் இவ்விதம் நான்கைந்து சங்கங்கள் இருந்தால் கிராம ஒற்றுமை என்னவாகும்? ஏற்கனவேயே ஒடுக்கப்பட்டு சுரண்டப்படும் விவசாயிகள் தங்களுடைய கோரிக்கைகளை எப்படி — ஒற்றுமையின்றி— அடையமுடியும்? இவ்விதம் விவசாயிகள் சிதறிக்கிடந்தால் நன்மையடைவது யார்? நிலச்சுவான்தார்களும், அதிகாரவர்க்கமுமல்லவா? விவசாயிகள் இயக்கத்தின் பலம், விவசாயிகளின் ஒற்றுமையில் இருக்கிறது என்பதை யாராவது மறுக்க முடியுமா?



### நேருவின் முழக்கம்

இதையெல்லாம் சிந்திக்காமல் காங்கிரஸ்காரர்கள், போட்டி விவசாயிகள் சங்கம் அமைப்பார்களேயானால் சுதந்திர இயக்கத்தின் ஒரு பகுதியாகிய விவசாயிகள் இயக்கத்தைக் கொலைசெய்தார்கள் என்ற குற்றச் சாட்டிற்கு உடன்படவேண்டும். 1936-ம் வருடம், அகில இந்திய விவசாயிகள்,சங்கம் அமைக்கப்பட்டபோது, சில காங்கிரஸ் தலைவர்கள் இவ்விதம்தான், "தனியான விவசாய சங்கம் இருக்கக்கூடாது; காங்கிரஸின் ஒரு பகுதியாகவே இருக்கவேண்டும்" என்று கூறினார்கள். அப்பொழுது காங்கிரஸின் தலைவராக இருந்த பண்டித ஜவஹர்லால் நேரு கீழ்கண்ட அறிக்கையை வெளியிட்டார்.

"கிஸான் சபை இருக்கக் கூடாதென்று நாம் கூறக்கூடாது. அப்படி கூறுவது காங்கிரஸின் கொள்கைக்கே எதிரானது. கொள்கை ரீதியிலும் அது தவறு. கிஸான் சபை இருக்கக்கூடாதென்று கூறுவது, இன்றிருக்கும் இயக்கத்திற்கும் விழிப்பிற்கும் குந்தகம் விளைவிக்கும். அதோடு கிஸான் சபை காங்கிரஸின் ஒரு பகுதியாக இருக்கவேண்டுமென்றும், கிஸான்சபை அங்கத்தினர் காங்கிரஸின் அங்கத்தினராக இருக்கவேண்டுமென்றும் கூறுவது சரியல்ல. அகில இந்திய சர்க்கா சங்கம், கிராமக் கைத் தொழில் சங்கம்போல் விவசாயிகள் சங்கத்தை நாம் கருதக்கூடாது. இவை இரண்டையும் நமக்குக் கட்டுப்பட்டு நடக்கவேண்டும் என்று நாம் கூறுவதுபோல் கிஸான் சபையை சொல்லக்கூடாது. அப்படிக் கூறினாலும், வேறு கிஸான் சபைகள் தோன்றுவதை நம்மால் தடுக்கமுடியாது. அவ்விதம் நாம் கிஸான் சபையைக் கட்டுப்படுத்தினால், கிஸான் சபைக்கும் காங்கிரஸிற்கும் இடையில் பெரும் பிளவே ஏற்படும்".

1937ம் வருடத்தில் ஜவஹர்லால் நேரு கீழ்கண்டவாறு கூறினார்:

"தொழிலாளர்களுக்கும், விவசாயிகளுக்கும் தங்கள் சொந்த வர்க்க சங்கங்களை அமைத்துக் கொள்ள உரிமையுண்டு. அந்த உரிமை அவர்களுக்கு அத்தியாவசியமாகும். இந்த அடிப்படையான உரிமையை காங்கிரஸ் எப்பொழுதுமே அங்கீகரித்திருக்கிறது"

கடைசியாக ஹரிபுரா காங்கிரஸில், தனியான விவசாயிகள் சங்கம் ஏற்படுத்தும் உரிமையை நீண்ட விவாதத்திற்குப் பின் காங்கிரஸ் அங்கீகரித்தது.

### சீர்குலைவு வேண்டாம்

இதையெல்லாம் மறந்துவிட்டு, தனியான போட்டி சங்கம் ஏற்படுத்த முயலுவது, காங்கிரஸ்காரர்களின் தேசபக்திக்கு உகந்ததல்ல. தேசத்திற்கு விமோசனம் பிறக்கவேண்டுமானால் விவசாயிகளின் ஒற்றுமை உறுதிப்படவேண்டும். காங்கிரஸ் தேசபக்தர்கள், சீர்குலைக்கும் மனப்பான்மையை விட்டுவிட்டு, இன்று நாட்டின் பலபாகங்களிலும்தோன்றி வளர்ந்திருக்கும் விவசாயிகள் சங்கத்தின் மூலமாகவே,சேவைசெய்ய கடமைப் பட்டிருக்கிறார்கள் என்பதை அவர்களுடைய தேசபக்தியே அவர்களுக்கு எடுத்துக் காட்டட்டும்.

---

# பிணத்துக்கு கொள்ளிவைக்க விறகில்லை

ஒரு மணு எடைதானிருக்கும் ஒரு விறகு சுமை. அதை ஒரு கிராம ஹரிஜன பெண் தலையில் வைத்துக்கொண்டு வருகிறாள் டவுனில் விற்க. அந்தப் பெண்ணை சுமார் ஒரு டஜன் நகரவாசிகள் சூழ்ந்துகொண்டு "எனக்கு, உனக்கு" என்று சுமையை பிடுங்க ஆரம்பித்தனர். இந்தக் கூட்டத்தில் பி. ஏ. பி. எல்., படித்த வக்கீல் ஒருவர். "உனக்கு இரண்டு ரூபாய் வேண்டுமானாலும் கொடுத்துவிடுகிறேன்; என் வீட்டில் கொண்டுவந்து போடு" என்று அவர் விறகுக் காரியைப் பார்த்துச் சொல்கிறார். மற்றொரு பிராம்மண விதவையம்மாள் தண்ணீர் குடத்தை இடுப்பில் வைத்துக்கொண்டு, "என் குழந்தைக் குஞ்சுகள் முந்தாநாள் சாப்பிட்டதுதான். சுமையை எனக்குப் போடம்மா! குழந்தைகள் பசிதீரும்! உனக்கு கோடிபுண்ணியம் உண்டு! இவர்களெல்லாம் ஆண் பிள்ளைகள். ஓடி ஆடி விறகுதேட முடியும். நானெங்கேயம்பா போவது?" என்று அழாக் குறையாக தன் ஜீவிதத்தையே மனப்பாடம்போல் விறகுக் காரியிடம் ஒப்பித்து, அவளே சுமையை வாங்கிப்போனாள்.

6-12-44ல் உடுமலைப் பேட்டைக்கு நான் போனபோது, ஸ்டேஷனிலிறங்கி, டவுனை நோக்கி நடந்து கொண்டிருக்கும்போது நேரில் கண்டகாட்சி இது.

இந்த "வைபவத்தை" பார்த்துவிட்டு அரை பர்லாங்கு நடந்தேன். அங்கும் இதேமாதிரி ஒரு சச்சரவு. அந்தக் கும்பலில் என் நண்பர் ஒருவரைக்கண்டேன். "என்ன விசேஷம்" என்று விசாரித்தேன். "2 வாரமா, டிப்போவில் விறகு கிடையாது. இதற்கு முந்தி, அரிசிகூபனை டிப்போக்காரனிடம் காண்பித்து விறகு வாங்கிக் கொண்டிருந்தோம். ஆனால் இப்போதெல்லாம் சுள்ளி கிடைப்பதுகூட துர்லபமாகிவிட்டது" என்று பதில் அளித்தார். அவருடைய வீட்டில் 4, 5 நாட்களுக்கு முன் ஒருவர் இறந்துபோனதாகவும், பிணத்துக்கு கொள்ளிவைக்கக்கூட விறகு கிடைக்காமல், ஊரெல்லாம் அலைந்து கிட்டாமல் போகவே நெல் குத்தும் உலக்கையை உடைத்து விறகாக்கி கொள்ளிவைத்ததாகவும் கூறி ரொம்பவும் விசனப்பட்டார்.

### தொழிலாளர்கள் கஷ்டம்

மேலும். உடுமலைப்பேட்டையில் பஞ்சாலையும் உண்டு. பழனியாண்டவர் மில்லில் வேலைசெய்யும் தொழிலாளர்கள் விறகு நெருக்கடியால் படும் அவதியையும் அவஸ்தையையும் நேரில் பார்த்தேன்.

கோவையைவிட குறைந்த பஞ்சப்படியும் கூலியும் பெறும் தொழிலாளர்களால் மணு 2 ரூபாய்க்கு எப்படி விறகு வாங்க முடியும்? மேலும் விறகுதேட நேரமேது அவர்களுக்கு?

இந்த படுமோசமான நிலைமையில் பொது மக்களுக்கு தொண்டாற்ற நாம் முன்வர வேண்டும். தேசபக்தர்கள் முன்வந்து கிளர்ச்சி செய்து பொது மக்களை திரட்டினால்தான் நம்பிக்கை மலரும்; விறகு நெருக்கடியை தீர்க்கத் முடியும்.

---

# உழவன் கடிதம்

### செம்பனூர்

ஐயா!

எங்க ஊரிலே சங்கம் செய்யற வேலையைப்பத்தி அடிக்கடி எழுதிரிக்கீங்க; நாங்களும் வாரவாரம் தவறும பத்திரிகை படித்துவரோம்.

எங்களுக் கிருக்கற கஷ்டங்களெல்லாம் சொல்லித் தீராதுங்க; நாங்களெல்லாம் வாரத்துக்கு பயிர் செய்யரோங்க.

அறுவடைக்கு முன்னடி மேல் வாரத்தாருடைய ஆபீஸிலே பேஸ்கார்கிட்டே போய்ச்சொல்லி, அவர் சரின்னப்பறம்தான் அறுப்பு அறுக்கலாம். பேஸ்கார் காங்காணத்துக்கு ஒரு காவல்காரன் அனுப்புவாரு. அந்த காவற்காரனில்லாம அறுக்கக் கூடாது. அவனும் நாங்களுமா சேர்ந்து களத்திலே தானியத்தை பார்த்துக்கொரோம்.

ஆனைக்க, காவல்காரன் கூலிக்கு மொத்த தானியத்திலேருந்து கலத்துக்கு இவ்வளவுன்னு கொடுக்கிருங்க. இது சரியாகுங்களா? காவல்காரன் முதலாளி ஆள். நாங்களும் அவனும் சேர்ந்து காவல் காக்கரோம். அப்படியிருக்க அவனுக்கு மேல் வாரத்தாருன்னு கொடுக்கணும்.

இதிலே இன்னொரு சின்ன சமாச்சாரங்க. காவல்காரன் கூலின்னு வாங்கரது மேல்வாரத்தான் நெல் மண்டிக்கு போரது. அவனுக்கு ஏதோ பணம் கூலி கொடுக்கிராங்க.

இம்மாதிரி கங்காணம், இன்னும் சில சிலவுகள் செய்த பிறகு எங்களுக்கு வாரம் கொடுக்கிராங்க.

அப்புறம், வாமடுகட்டு வேறே. வாமடுக்கட்டுன்னு வயலுக்கு ஒரு கட்டு மேல் வாரத்தாருக்கு இன்னு அர்த்தம். எனக்கு 5 இடங்களிலே 5 வய்ல் இருந்தா, நான் 5 கட்டு கொடுக்கணும்.

இந்த கங்காணம், வாமடுக் கட்டுக்கெல்லாம் ரசீது கிடையாது. இந்த வகையில் மிராசுதாருக்கு சுமார் 1000 ரூபாய் வருமானம் கிட்டுதுன்னு சொல்லிக்கிராங்க.

இன்னும் மரவரி வேறே. என்னுடைய பாட்டன் அல்லது முப்பாட்டன் ஏதேனும் புளிய மரம், பனை மரம் வெட்டி யிருக்கலாம்; அதற்காக இன்றைக்கும் மரவரி செலுத்தனுங்க. இது பணமாக செலுத்தணும். ரசீது உண்டுங்க.

இந்த கண்மாய் ரிபேருக்காக வருஷாவருஷம் நெல் எங்கள் கிட்டேயிருந்து வசூலிக்கப்படாது. இதிலே வருட வருமானம் சுமார் ரூ. 1000 இருக்கும். ஆனா கண்மாய் ரிபேரென்னமோ, மாமாங்கத்துக்கு ஒரு தடவைகூட இல்லே, 20 வருஷத்துக்கு ஒரு தடவைங்க. இது பகல் கொள்ளைதானுங்க!

---

# உலக்கைமுதல் உளிப்பிடிவரை அக்கினிதேவனுக்கு

பொள்ளாச்சியிலும் விறகு கஷ்டம் தலை தூக்கிவிட்டது. உயர்தர பள்ளிக்கூட உபாத்தியாயர் முதல் சாதாரண ஜின்னிங் பேக்டரியில் வேலைசெய்துஜீவிக்கும் தொழிலாளர்வரை தெருத்தெருவாக தங்கள் வேலை நேரம் தீர்ந்ததும் விறகுக்காக அலையும் காட்சி கண்கொண்டு பார்க்க சகிக்காது.

சர்க்காரின் நிர்ணய விலை ரூபாயிக்கு $4\frac{1}{2}$ மணுவாம்! ஆனால், இங்கு எப்போதாவது ஒரு நாளைக்கு டிப்போவில் ரூபாய்க்கு $2\frac{3}{4}$ மணு கிடைக்கும்! அதுவும் பச்சை விறகு!

சில நாட்களில் இந்த டிப்போக்காரர்கள் வண்டியை வருகிற வழியிலேயே கள்ள மார்க்கெட்டில் விற்றுவிடுவார்கள் $1, 1\frac{1}{4}$ டன் எடையுள்ள வண்டி விறகை 40, 50 ரூபாய்க்கு விற்று விடுவர். ஒவ்வொரு வீட்டிலும் உலக்கையிலிருந்து உளிப்பிடி வரை சகலமும் அக்கினிதேவனுக்கு இரையாகிவிட்டது.

நிலைமையை உணர்ந்து ஒற்றுமையாய் உழைக்க தேசபக்தர்கள் முன்வருவார்களா அல்லது மக்களை துன்பத்தில் விட்டுவிட்டு இன்னும் வாளாவிருப்பார்களா என்பதே கேள்வி.

---

——69-வது பிறந்த தினம்——

# முஸ்லிம்களின் மாபெரும் தலைவர் ஜனுப் ஜின்னு

*"முஸ்லிம் மக்களின் நலன்களுக்கும் முஸ்லிம் லீகிற்கும் விசுவாசம் காட்டுவது, எந்தவிதத்திலும், எந்தக்காலத்திலும் என்னுடைய வாழ்க்கையையே நான் காணிக்கையாக அர்ப்பணித்திருக்கும்—விரிவான தேசிய நலன்களுக்கு முரணுகாது" என்று 1914ல் ஜனுப் முகமதலி ஜின்னு கூறினர்.*

அன்று அவர் காங்கிரஸிலிருந்தார். சுய ஆட்சி இயக்கத்தில் பெரிய வீரராய் திகழ்ந்தார். காங்கிரஸிலிருந்துகொண்டே முஸ்லிம் லீகிலும் இருக்கலாமா என்ற வினவிற்கு ஜனுப் ஜின்னு மேற்கண்டவாறு கூறினர்.

கடந்த 25ம் தேதியுடன் அவருக்கு அறுபத்தெட்டு வயது பூர்த்தியாகிறது. தம் வாழ்நாளில் பெரும்பகுதியைப் பொதுஜன சேவையில் கழித்த அன்னுரை வாழ்த்த ஒவ்வொரு தேசபக்தனும் கடமைப்பட்டிருக்கிருன்.

ஆனல் அநேக காங்கிரஸ் தேசபக்தர்களுக்கு அதுபிடிக்கவில்லை. அவரைப் பார்த்தால் ஒரு வகுப்புவாதியாகவும், ஏகாதிபத்திய ஏஜெண்டாகவுமே அவர்களுக்குத்தோன்றுகிறது. 1914ல் தான் சொன்ன வார்த்தைகளுக்கு எதிராக அவர் நடந்துகொள்கிருர் என்று நினைக்கின்றனர்.

### வகுப்பு வாதியா ?

ஆனல் உண்மை என்ன? வகுப்புவாதத்தினல் எவ்வளவு நாட்களுக்கு ஜனங்களை ஏய்க்க முடியும்? "வகுப்புவாதி" என்று விடாமல், தொடர்ச்சியாக, ஒவ்வொரு தேசிய பத்திரிகையும் பல வருடங்களாக எழுதித்தான் வருகின்றன ; ஆனல் ஜனுப் ஜின்னுவின் செல்வாக்கை மட்டும் குறைக்க முடியவில்லை. அதற்கு பதிலாக அவருடைய செல்வாக்கும், மதிப்பும் முஸ்லிம் மக்களிடையே நாளுக்குநாள் வளர்ந்தோங்கி வருகிறது.

உண்மையில் பார்க்கப்போனல், அவரை எதிர்ப்பவர், "அவர் இஸ்லாமிய மதக் கோட்பாடுகளையே கைவிட்டுவிட்டவர்" என்றே அவர்மீது குற்றஞ்சாட்டுகின்றனர். "உண்மை முஸ்லிம் அல்ல!" என்கின்றனர்! "ரம்ஜான் மாதத்தில் சிகரெட் பிடித்துக்கொண்டிருந்தார்" என்கின்றனர். அதோடு ஜின்னுவின் பழக்க வழக்கங்களும் மேல்நாட்டு நாகரீகத்தை ஒட்டியதாகவே இருக்கிறது. மேல்நாட்டு உடைகளையே அணிகிருர். அவரே ஒப்புக்கொள்கிருர், தனக்கு மதத்தில் அவ்வளவு அதிகமான தேர்ச்சி கிடையாதென்று. ஆயினும், முஸ்லிம்கள் அவர் தலைமையில் தான் திரண்டு நிற்கின்றனர். அவர் கூறுவதைத்தான் கேட்கின்றனர்.

இதிலிருந்து என்ன தெரிகிறது? முஸ்லிம்கள் வகுப்புவாதத்திற்கு செவிசாய்த்துக் கூத்தாடுபவர்களாக இருந்தால், ஜின்னுபோன்றவருக்கு அவர்களிடையே இடமிருக்கமுடியாதென்பது விளங்கவில்லையா? அவர் மதத்தைக்கொண்டு மக்களை மயக்கவில்லை. முஸ்லிம்கள் அவருடைய தலைமையை ஏற்றிருப்பதற்கு காரணம் வேறென்று.

அதுதான் அவர் பேசும் அரசியல்; வகுப்புவாதமல்ல. முஸ்லிம் மக்களின் சுதந்திர அபிலாஷைகளுக்கு திட்டவட்டமான உருவத்தையளித்து, ஒரு வழிகாட்டியாக அவர் நிற்பதேயாகும்.

அவர் 25 வருடங்களுக்கு முன்பிருந்து சட்டசபையில் அங்கம் வகித்து வருகிருர். விவாதத்தில் யாரையும் தோற்கடிக்கக்கூடியவர். நல்ல அறிஞர்என்பதை ஒப்புக்கொள்ளாத காங்கிரஸ் தலைவரில்லை. சம்பாதிப்பதையே நோக்கமாகக் கொண்டிருந்தால் இந்நேரம் எவ்வளவோ கோடிக்கணக்கில் அவர் சேர்த்திருக்கலாம். ஆனல் அவ்விதம் செய்யவில்லை. அதற்குப்பதிலாக,சட்டசபையில் சர்க்காரைக் கண்டித்து அவரைவிட அதிக

**இஸ்மத் பாஷா**

மாகப்பேசுபவர் யாருமில்லை. கரேக்கள் ஸ்ரீவஸ்தவாக்களைப்போல் ராஜப்பிரதிநிதியுடன் அவர் சேர்ந்துவிடவில்லை. ஏகாதிபத்தியத்தின் ஏஜெண்டாக இருந்திருந்தால், லார்டு வேவலால் மிக வன்மையாக எதிர்க்கப்படும் "பாக்கிஸ்தான்" கோஷத்தைக் கோஷிப்பாரா? பாக்கிஸ்தான் என்ருல் முஸ்லிம் மக்கள் பெரும்பாலாக வசிக்கும் பிரதேசங்களிலிருந்து ஏகாதிபத்தியத்தை விரட்டுவதென்றல்லவா அர்த்தம்?

### காயிதே ஆஜம்

காயிதே ஆஜம் (மாபெரும் தலைவர்) என்ற பட்டம் மூகமதலி ஜின்னுவிற்கு மிகவும் பொருத்தம். ஏனெனில் எந்தக்காலத்திலும் இந்திய முஸ்லிம்கள் ஒரே ஸ்தாபனத்தின் கீழ், அசையாத உறுதியுடன், இன்று ஒன்றுபட்டிருப்பதுபோல் ஒன்றுபட்டிருந்ததில்லை; அவர்களுடைய லக்ஷியம்—பாக்கிஸ்தான்—தங்களுடைய சொந்ததாயகத்தில் பரிபூரண ராஜ்ஜியாதிகாரத்துடன் சுதந்திரமக்களாய் வாழவேண்டும் என்ற பேராவல்—மிகுந்த சக்தியுடன் ஹிருதயத்தைப் பிளந்துகொண்டு இன்று வெளிவருவதுபோல், எந்தக்காலத்திலும் வெளிவந்ததில்லை.

முஸ்லிம் மக்கள் என்று நான் கூறும்போது, தமிழ் நாட்டிலுள்ள சிறுபான்மையினரான முஸ்லிம்களைமட்டும் மனதில் நிறுத்திக்கொள்ளாதீர்கள். கிழக்கு வங்காளம், பஞ்சாப், சிந்து, எல்லைப்புற மாகாணம், பலூசிஸ்தான் ஆகிய பெரும்பாலான முஸ்லிம்களின்தாயகமாக இருக்கும் பிரதேசங்களைப் பாருங்கள் இந்த முஸ்லிம்மக்களின் தாயகத்தில் காணும் அரசியல், பொருளாதார, சமூகவளர்ச்சியை, மற்ற ஹிந்துமக்கள் வசிக்கும் பிரதேசங்களில் காணும் வளர்ச்சியோடு ஒப்பிட்டுப்பார்த்தால், அவை மிகவும் பிற்போக்காக இருப்பதை அறிவீர்கள். காங்கிரஸ் தேசீய இயக்கமாக வளர்ந்தபோது, இந்த முஸ்லிம் தாயகங்களில் ஊடுருவிச் சென்று, மக்களின் வாழ்க்கை நிலையை உயர்த்த சில சரித்திரக் காரணங்களால் தவறிவிட்டது என்பது உண்மை அதனல் இப் பிரதேசம் மற்ற பிரதேசங்களைவிட வளர்ச்சியில் குன்றியிருக்கிறது. பெரும்பாலான மக்கள் பஞ்சைகளாக வாழ்கின்றனர்.

### தேசீய ஸ்தாபனம்

வயதில் பெரிய தேசீய இயக்கத்தால் கவனிக்கப்படாமல் விடப்பட்ட தங்கள் உரிமைகளுக்காக இந்த மக்களிடையே, காங்கிரஸிற்குப் பின்பு தோன்றி வளர்ந்த தேசீய ஸ்தாபனமே முஸ்லிம் லீக்.

காங்கிரஸ் நடத்திய இயக்கம் தேசம் பூராவிலும் விழிப்பையுண்டாக்கிவிட்டது. முஸ்லிம்களும், லீகும் இதனல் நன்மை அடைந்திருக்கின்றனர். காங்கிரஸின் மூலம் விழிப்படைந்த முஸ்லிம் தலைவர்கள் தான், கவனிக்கப்படாமல் விடப்பட்ட தங்கள் சொந்த மக்களின் கேவலமான நிலைமையை கவனிக்க முற்பட்டனர். ஆதலின் மிகுந்த செல்வாக்கைப்பெற்ற பல முஸ்லிம் தலைவர்கள் காங்கிரஸிலிருந்தவர்களென்பதில் ஆச்சரியமில்லை. முகமதலி ஜின்னுவும் அப்படியே.

வளர்ச்சியில் குன்றியுள்ள மக்களின் அந்தஸ்தை மற்ற வளர்ச்சியுற்ற மக்களின் அந்தஸ்துக்கு சமமாக உயர்த்துவதில் முஸ்லிம் லீக் தேசீய ஸ்தாபனமாக வளர்ந்திருக்கிறது. அதனல் அதில் உழைப்பவர்கள் தேசத்தின் பொதுவான நலன்களுக்கு எதிராக நடந்துகொண்டார்களென்ருே, பொதுவான சுதந்திரத்தைக் கைவிட்டுவிட்டார்களென்ருே கூறுவது தவறு.

1924 லிருந்து 1935 வரை முஸ்லிம் அரசியல் சீரழிந்து கிடந்த காலம். கிலாபத் இயக்கத்தினர், அஹ்ரார்கள், ஜமீயதுல் உலமாக்கள், முஸ்லிம் மகாநாடு, முஸ்லிம் லீக் என்று பல்வேறு ஸ்தாபனங்களாகப் பிரிந்து பிளவுற்றுக் கிடந்தனர் முஸ்லிம்கள். எல்லோரும் சம்மதிக்கும்படியான ஒரு திட்டத்தின் கீழ் முஸ்லிம்களை லீக் கொடியின் கீழ் ஒன்றுதிரட்ட ஜனுப் ஜின்னு பகீரதப் பிரயத்தனம் செய்தார்.

இந்தக் காலத்தில்தான், அவர் தன்னுடைய கீர்த்தி பெற்ற பதினன்கு அம்சங்களைக் கொண்ட திட்டத்தை வகுத்தார். அதன் அடிப்படையில் குறிப்பிடத்தக்க அளவு முஸ்லிம்களை ஒன்றுபடுத்திவிட்டார். அவருக்கு பெருமையைத் தருவது என்னவெனில், ஒரு குறிப்பிட்ட காலத்தில் பெரும்பாலான முஸ்லிம்கள் என்ன நினைக்கிருர்களோ, அதற்கு உருப்படியான ஒரு உருவத்தைக் கொடுத்து, அந்தக் கோரிக்கைகளுக்காக தீவிரமாக உழைப்பதேயாகும்.

அவரிடமுள்ள இந்தத் தன்மைதான் அவரை, 1937-ல் அமைக்கப்பட்ட புதிய சட்டதிட்டங்களுக்குப் பின்பு, முஸ்லிம் தலைவர்களிடையே "மாபெரும்" தலைவராக்கியது.

இன்று ஜின்னு என்ருல் பாக்கிஸ்தான்; பாக்கிஸ்தான் என்ருல் ஜின்னு. எந்த முஸ்லிம் தலைவரும் அடையாத பெரும் புகழை அடைந்துவிட்டார். லக்ஷக்கணக்கான முஸ்லிம்களின் உள்ளங்களில் குடிபுகுந்துவிட்டார்.

அறியாமையில் ஆழ்ந்து சிதறிகிடந்த முஸ்லிம் மக்களை ஒன்றுபடுத்திய ஜனுப் ஜின்னுவை தம்முடைய 68-ம் வயதைப் பூர்த்தி செய்திருக்கும் இன்று முஸ்லிம்கள் மட்டுமல்ல — இந்தியா பூராவும் — எதிர்பார்க்கிறது, ஒற்றுமை சக்தியால் சுதந்திரத்திற்கு ஒரு வழியைக்காட்ட அவருடைய அழியா தேசபக்தி அவருக்குத் துணைசெய்யுமென்று!

---

## ஜனசக்தி

**ஏஜெண்டுகள் கவனிக்க!**

1945 ஜனவரி முதல், 5 பிரதிகள் ஆர்டர் செய்யும் ஏஜெண்டுகளுக்கும் ஏஜென்ஸி உரிமை கொடுக்கப்படும்; மற்ற ஏஜெண்டுகளைப்போல் 12½% கமிஷன் தரப்படும்.

மூன்று மாதங்களுக் கொருமுறை ஏஜெண்டுகளின் கணக்குகள் பரிசீலனை செய்யப்படும். இந்த மூன்று மாத காலத்தில் பாக்கி பூராவையும் குறித்த தேதியில் செலுத்தியுள்ள ஏஜெண்டுகளுக்கு ரூபாய்க்கு 0–0–6 (அரையணு) போனஸ் அளிக்கப்படும். இந்த மூன்று மாத காலத்தில் அவர்களுக்கு அனுப்பப்பட்ட பிரசுரங்களின் மொத்த கிரயத்தை அடிப்படையாகக் கொண்டுதான் இந்த போனஸ் நிர்ணயிக்கப்படும்.

பாக்கித் தொகை டிபாசிட்டுக்கு மேல் போகக்கூடாது; பாக்கி டிபாசிட்டைவிட அதிகமானல் முன்னெச்சரிக்கையின்றி பத்திரிகை நிறுத்தப்படும். இதைத் தவிர்க்க ஒரே வழி, காலா காலத்தில் பணம் அனுப்புவது ஒன்றுதான்.

---

# சோவியத் யூனியன் ஏற்பட்ட வரலாறு

## சுயநிர்ணயம் நடைமுறையில் அனுபவிக்கும் உரிமை

**கே. பாலதண்டாயுதம்**

தெரிந்தால் பேசவேண்டும்; தெரியாவிட்டால் தெரியாது என்று சொல்லிவிடவேண்டும். தெரியாவிட்டாலும் தெரிந்தவர்களைப் போல் பேசுகிருர்களே அதைப் போல் துரோகம் ஒன்றுமே கிடையாது.

### அதிகப்பிரசங்கிகள்

எடுத்தும் எடுக்காமல் இதை ஏன் சொல்கிறீர்கள் என்கிறீர்களா? சோவியத் ரஷ்யாவைப்பற்றி சில 'மஹாபடித்தவர்கள்' பேசுவதைக் கேட்டால் எனக்கு அப்படித்தான் தோன்றுகிறது.

உதாரணத்திற்கு ஞாபகத்திலிருக்கும் ஒன்றை சொல்கிறேன். 'சோவியத் ரஷ்யாவில் சுயநிர்ணய உரிமை' என்பது ஏட்டளவில்தான். அதை அவர்கள் என்றுமே அனுபவித்தது கிடையாது" என்று சரித்திர நிபுணர் என்று பட்டம் பெற்றவர் பிரசங்கிக்கிருர். குறிப்பிட்ட இந்த விஷயம் என் நினைவுக்கு வருவதற்குக் காரணம் இம்மாதம் 30-ந் தேதி ஐக்ய சோவியத் சோஷலிஸ்ட் குடியரசு பிறந்து சரியாக 22 வருடங்களாகின்றன.

அந்நந்நாள் வரப்போகிறது. இத்தருணத்தில் சோவியத் குடியரசு பிறப்பு விஷயமாக நடந்ததை நடந்தவாறு கூறுகிறேன். கேட்டுவிட்டு சரித்திராசிரியர் சரியா, அல்லது சரித்திரம் சரியா என்பதை நீங்களே முடிவுசெய்துகொள்ளுங்கள்.

### உரிமைச் சாஸனம்

1917-ம் வருஷம் நவம்பர் 1-ம் தேதி நடந்த புரட்சியில் ஜார் மன்னன் ஒழிந்தான். சாதாரணமாக ரஷ்யா என்று அழைக்கப்படும் பிரதேசத்தில் வாழும் சகல மக்களும் விடுதலை பெற்றனர். நவம்பர் 15-ம் தேதி சோவியத் சர்க்கார் ரஷ்ய தேசங்களின் உரிமைச் சாஸனம் நிறைவேற்றப்பட்டது. அது கீழ்வருமாறு:

1. ரஷ்ய தேசங்களுக்கு சம அந்தஸ்து, பரிபூர்ண சுதந்திரம்.
2. ரஷ்ய தேசங்களுக்கு எந்தவித கட்டுப்பாடு இல்லாத சுயநிர்ணயத்திற்கும், பிரிந்துபோய் சுயேச்சையான சர்க்கார் அமைக்கவும் உரிமை.
3. எல்லாவிதமான தேசிய, மத விசேஷ உரிமைகளும், தடைகளும் ரத்து.
4. ரஷ்ய நாட்டில் வாழும் எல்லா தேசீய சிறுபான்மையோருக்கும், ஜாதியினருக்கும் தங்கு தடையின்றி வளர்ச்சி.

### நடைமுறையில்

"ஏட்டளவில் தான் எல்லாம்" என்று வாதாடுபவருக்கு இதைச் சொன்னல் ஏற்குமா? நடைமுறையையும் சொல்கின்றேன்.

யுக்ரெய்ன், பைலோ ரஷ்யா, அஜெர்பைஜான், ஆர்மீனியா, ஜார்ஜியா இவை யெல்லாம் நாம் பொதுவாக ரஷ்யா என்று குறிப்பிடும் எல்லைக்குள் இருப்பவை. அதனுடைய பரிபூர்ண சுதந்திரத்தை சுயேச்சையான, தனி சர்க்காரை சோவியத் அங்கீகரித்தது. எடுத்துக்கொண்ட விஷயம் தெளிவுபட வேண்டுமானல் இப்படிச் சொல்கிறேன். புரட்சிக்குப் பின் ரஷ்யாவில் ஒரு சர்க்கார் ஏற்படவில்லை. பல சர்க்கார்கள் ஏற்பட்டன. "சுயநிர்ணய உரிமை" என்று பிரகடனம் செய்த சோவியத் சர்க்கார் வார்த்தையளவில் அதை மந்திரித்துக்கொண்டு நடைமுறையில் ஏற்பட்ட பல சர்க்கார்களுக்கு எடக்குச் செய்யவில்லை; அவர்களை ஆனந்தத்துடன் அங்கீகரித்தன! இதற்கு சரித்திராசிரியர் என்ன சொல்வாரோ?

நாம் ஜார் ஆண்ட பிரதேசத்தைப் பூராவும் ரஷ்யா என்கிறோம்; ஆனல் ரஷ்யர்கள் எனும் தேசத்தினர் மட்டும் வாழுவது அதில் ஒரு பகுதி தான், பெரும்பகுதியா யிருந்தாலும் கூட. ரஷ்யர்கள் எல்லோரும்கூடி—ஏன் என்ருல் அவசியம் இருந்தது—1918-ம் வரும் ஜனவரி மாதம் 24-ம் தேதி சோவியத் ரஷ்ய குடியரசை அமைத்தார்கள். 'அவசியம்' என்று மழுப்பாதீர்கள் என்பீர்கள். சரி, சந்தேகம் ஏன்! சோவியத் ஏற்படாமலிருப்பதற்கு உள்ளிருந்தே கருவருக்கத் துரோகிகள் கிளம்பினர். அவர்களை எதிர்த்தொழிக்கும் அவசியம்.

### ஒப்பந்தத்தால் ஒற்றுமை

சோவியத் சிசுவை கழுத்தைத் திருகிக்கொல்ல 14 தேசங்கள் படைதிரண்டுவந்த கதை பலமுறை கேட்டிருப்பீர்கள். அப்பொழுது எதிரியை எதிர்க்க யுக்ரெய்ன் சோவியத் சோஷலிஸ்ட் சர்க்கார் 1919ம் வருஷம் மேமாதம் 18ம் தேதி ரஷ்ய குடியரசுடன் உடன்படிக்கை செய்வதென தீர்மானித்தது. பைலோ ரஷ்யாவும், இன்னும் இதர சோஷலிஸ்டு குடியரசுகளும் அதேமாதிரித் தீர்மானங்களை நிறைவேற்றி யனுப்பின. 1919ம் வருஷம் ஜூன் மாதம் 1ம் தேதி ரஷ்யக் குடியரசு ராணுவ அரசியல் ஒப்பந்தத்திற்கு இணங்கி பதில் அனுப்பிற்று இவ்வளவும் பொது விரோதியை எதிர்த்து சோஷலிஸத்தைக் காக்கும் பிரமாண்டமான யுத்தத்தின் மத்தியில் நடந்தது என்பதை மறக்கக்கூடாது! சோவியத் சர்க்காருக்கு "சுயநிர்ணயம்" என்ருல் சொல்லொன்று, செயலொன்று என்றிருந்தால் ஆபத்தான அந்தக்காலத்தில் இதுதான் சமயமென்று யுக்ரெய்ன் முதலிய தேசங்களின் சுதந்திரத்தை—சுயநிர்ணயத்தை — பறித்திருக்க மாட்டார்களா?

1920ம் வருஷம் மே மாதம் 20ம் தேதி யுக்ரெய்ன் சர்க்காரும் ரஷ்ய சர்க்காரும் ரயில்வே, பணம், தபால் முதலியவைபற்றி ஒரு ஒப்பந்தம் செய்துகொண்டன. 1920, செப்டம்பர் மாதம் 30ம் தேதி அஜெர்பெய்ஜானுடனும், 1921ம் வருஷம் ஜனவரிமாதம் 16ம் தேதி பைலோ ரஷ்யாவுடனும் 1921ம் வருஷம் மே மாதம் 21ம் தேதி ஜார்ஜியாவுடனும் இம்மாதிரி ஒப்பந்தங்கள் ஏற்பட்டன. ஆம்! இதை மனத்தில் கொள்ளுங்கள், ஒப்பந்தங்கள் தான்!

தலையீட்டு யுத்தம் முடிந்தது. சீர்

(6-ம் பக்கம் பார்க்க)

---

# யூனியனிஸ்டுகளுக்கு கல்தா?

## பாஞ்சால காங்கிரஸ் தலைவர் அறிக்கை

"எதிர்கட்சிகளிடம் இந்த கூட்டத்திலேற்பட்ட உருக்குபோன்ற ஒற்றுமை, பட்ஜெட் கூட்டத்தின் போதுமிருந்தால், யூனியனிஸ்ட் சர்க்காரின் வீழ்ச்சி நிச்சயம்" என்று கூறினர், பஞ்சாப் சட்டசபை காங்கிரஸ் கட்சி தலைவரும் சட்டசபை எதிர்க்கட்சி தலைவருமான மகம்மத் ஹாஸ்ஸான் "ஓரியன்ட் பிரஸ்" நிருபருக்கு அளித்த பேட்டியில்.

மேலும் கூறினர்:—

"முதன்முதலாக, எதிர்க்கட்சிகள் ஒற்றுமையாய் உழைத்தன. இந்த கூட்டு வேலையை எவ்வளவு போற்றினலும் போதாது. பட்ஜெட் கூட்ட காலத்தில் நாம் நம்பிக்கை இல்லா தீர்மானம் நிறைவேற்ற முடியுமென்று உறுதியாய் நம்புகிறேன்.

"சகல விஷயங்களிலும் காங்கிரஸ், லீக் கட்சிகள் ஒருவரையொருவர் கலந்தாலோசித்தோம். நாங்கள் எங்களுடைய ஸ்தாபனங்களின் பொதுப்படையான கொள்கைகளிலிருந்து வழுவவில்லை. இதன்மூலம், காங்கிரஸுக்கும் லீகுக்கும் ஒரே விதமான நலன்கள்தான் என்பது நிதர்சனமாக்கிவிட்டோம்."

---

## மதிப்புரை

### மார்ஷல் ஸ்டாலின்

இயற்றியவர்: ர. ஆ. கபூர்.
பக்கங்கள் 66. விலை அணு 12.
அல்லயன்ஸ் கம்பெனி, மைலாப்பூர், சென்னை.

சோவியத் ரஷ்யாவின் வீரச்சாதனைகளையும், அதன் தலைவர் ஸ்டாலினுடைய திறமையையும் கண்டு சந்தோஷங்கொண்டு வருகின்றனர் உலகமக்கள். இந்த சந்தர்ப்பத்தில் ஸ்டாலினுடைய ஜீவிய சரித்திரத்தைப்பற்றிய நூல் தமிழில் வெளிவந்திருப்பது வரவேற்கத்தக்கது.

சென்றவாரத்தில்தான் ஸ்டாலின் 65 ஆண்டு வாழ்க்கையைப் பூர்த்தி செய்தார். இந்தக் காலத்தில் அவர் சோஷலிஸ்ட் புரட்சியை நிலைநாட்டி, சோஷலிஸ்ட் சமூகத்தை ஸ்திரமான அஸ்திவாரத்தின் மீது கட்டியதன் பயனுய், மற்றைய சமூகங்களைவிட பலமானதும், வளர்ச்சி யடைந்து வலுப்பட்டு வருவதும் சோவியத் சமூகமென்பதை கடந்த ஈராண்டின் அனுபவம் உணர்த்திவிட்டது.

ஸ்டாலினுடைய வாழ்க்கை தீரம் நிறைந்தது; வீரம் நிறைந்தது; பல போராட்டங்களில் உறம் பெற்று உறுதியடைந்த வாழ்க்கை. இளம் பருவத்திலிருந்தே புரட்சிப்பணியிலிறங்கியவர் ஸ்டாலின். கொள்கை வித்தியாசங்களை எதிர்த்துப்போராடியவர் ஸ்டாலின். கட்டங்கட்டமாக அவரது வாழ்க்கையை எளிய நடையில் தோழர் கபூர் எடுத்துக் கூறியிருக்கிருர்.

1917-ல் நடந்த பூர்ஷ்வா புரட்சிக்குப் பின்னர் லெனின் கெரன்ஸ்கி சர்க்காருக்கு ஆதரவுதந்ததாகக் கூறியிருப்பதும், கம்யூனிஸ்டுகளுக்கு கெரன்ஸ்கி 'சர்க்காரில் இடங்கொடுத்ததாக'க் கூறுவதும் சரியல்ல கெரன்ஸ்கி சர்க்காரை ஆதரித்து அதில் இடம் பெற்ற பகுதி போல்ஷ்விக் (லெனின்) கட்சியல்ல; அதற்கு எதிரான மென்ஷ்விக்குகள் தான்.

புத்தகம் யாரும் படித்துப் புரிந்துகொள்ளக்கூடிய நடையில் எழுதப்பட்டிருக்கிறது. சோவியத் நாட்டுத் தலைவர்களைப்பற்றியும், பொதுஜன இயக்கத் தலைவர்களைப் பற்றியும் இத்தகைய புத்தகங்கள் அவசியம்.

—ஸி. எஸ்.

## இந்த வாரத்தில் யுத்தப் போக்கு

# நாஜி எதிர்த் தாக்குதல் எப்படி?

## ஹங்கேரியில் மக்கள் சர்க்கார்

*"வான் ருன்ஸ்டெட் ஆரம்பித்துள்ள எதிர்த் தாக்குதலின் மர்மம் மேற்குப் போர்முனையிலல்ல. நாஜிகளின் கிழக்குப் போர்முனையில், சோவியத் ஜெர்மன் போர்முனையில் உள்ள நிலைமையிலிருக்கிறது" என்று ராய்ட்டர் நிருபர் கூறுகிறார்.*

கிழக்கே பனி உரைந்து வருகின்றது. பூமி கெட்டிப்பட்டு வருகின்றது. அந்த நிலப் பரப்பில் டாங்கிகள், பீரங்கிகள், காலாட்படைகள் வேகமாக நடமாட முடியும். சோவியத் படைகளின் மாரிக்காலத் தாக்குதல் ஆரம்பமாகி விடும். அப்பொழுது கிழக்கிலும், மேற்கிலும் நேசதேசங்களின் பிரம்மாண்டமான தாக்குதலைச் சமாளிக்க நாஜிகளுக்கு முடியாது. கிழக்குப் போர்முனையில் திறமையுடன் முன்னேறும் சோவியத் படைகளைத் தடுக்க ஏராளமான படைகள் வேண்டும். மேற்கிலுள்ள நேசப் படைகளைத் தாக்கி, குழப்ப மேற்படுத்திவிட்டால், அங்கிருந்து படைகளையும் போர்ச் சாதனங்களையும் கிழக்கே கொண்டு போகலாம் என்று நாஜி ராணுவத் தலைமை எண்ணுகின்றது.

இதுதான் ருன்ஸ்டெட்டின் எதிர் தாக்குதலுக்குக் காரணம்.

பெல்ஜியத்திலிருந்து பிரான்ஸின் தென்கோடி வரையிலுள்ள மேற்குப் போர்முனையில், பெல்ஜியத்தின் எல்லையில் ருன்ஸ்டெட் தன்னுடைய தாக்குதலை ஆரம்பித்தான். 70, 80 டன் டாங்கிகள், அங்கு மிங்குமாக திரட்டப்பட்ட ஆயிரம் ஆகாய விமானங்கள், மோட்டார் படைகள், இவற்றைச் சேர்த்து 14 டிவிஷன்களுடன் ருன்ஸ்டெட், டிசம்பர் 17-ந் தேதி தாக்குதலை ஆரம்பித்தான்.

### ஏன் பெல்ஜியத்தில்?

ஜெர்மன் யுத்த தந்திரம் எந்தத் தாக்குதலிலும் மேற்கு முனையில் பெல்ஜியம் வழியாகச் சென்று கடற்கரையைப் பிடித்துக் கொள்வதின் அடிப்படையை உடையது. இத்திட்டத்திற்கு ஷ்லீபன் திட்டம் எனப் பெயர். பிரிட்டனிலிருந்து உதவி வருவதை கடலோரத்திலிருந்து தடுக்கலாம். பின்னர் பிரான்ஸிற்குள் நுழைந்து தாக்குவது எளிது என்று கருதி யிருக்கிறது. 1914–18 யுத்தத்தில் இந்த திட்டத்துடன் படை எடுத்தனர். கடற்கரை பிரதேசத்தை யடையாததால் வெற்றியடையவில்லை. 1940-ல் பிரான்ஸை 14 தினங்களில் வீழ்த்திவிட்டனர்.

போரின் இறுதிக் கட்டத்தில் நான்கு புறங்களிலிருந்தும் நெருக்கப்பட்டுவரும் ஜெர்மானியர் இன்று மறுபடியும் அதே தந்திரத்தைக் கையாளப் பார்க்கின்றனர். இதற்குச் சாதகமாகயிருக்கிறது பெல்ஜியத்திலுள்ள அரசியல் நிலைமை. பாஸிஸ்டுகளுக்குப் பணிசெய்த உத்யோகஸ்தர்கள், அனுதாபம் காட்டும் பணமூட்டைகள், ஒழிக்கப்படவில்லை. பொது ஜனங்களிடமிருந்து ஆயுதங்கள் பிடுங்கப்பட்டிருக்கிறது. பெல்ஜியத்தில் தன்னுடைய தாக்குதலைச் செலுத்த ருன்ஸ்டெட் முடிவு செய்திருப்பதில் என்ன ஆச்சர்யம்?

பிரெஞ்சு தேசீய எதிர்ப்பு ஸ்தாபனம் பிரான்ஸிலுள்ள ஜெர்மானிய ஒற்றர்களை—பாஸிஸ்டு அனுதாபிகளை வேட்டையாடும்படி உத்திரவிட்டிருக்கின்றது. இப்படிப் பொதுஜன உணர்ச்சியை உபயோகிக்க பெல்ஜியத்தில் என்ன வசதி இருக்கிறது.

ஒரு வாரத்திற்குள்ளாக அமெரிக்க முதலாவது படையைப் பிரித்து விட்டனர் ஜெர்மானியர். 50 மைலுக்குமேல் முன்னேறியிருக்கின்றனர். மால்மெடி என்ற ஊரைப் பிடித்து விட்டனர். அமெரிக்க சைன்யத்துக்கும் வடக்கே போரிட்டுவரும் பிரிட்டிஷ் இரண்டாம் படைக்கும் அபாயம். பிரிட்டிஷ் இரண்டாம்படையும் சில விடங்களில் பின்வாங்கி வருகிறது. நாஜிபடைகளில் ஒரு பகுதி கடற்கரை நோக்கிச் செல்லும்; இன்னொரு பகுதி லக்ஸம்பேர்க் பிரதேசத்தின் வழியாக பிரெஞ்சு எல்லையை நோக்கித் தாக்குகின்றது.

இந்தத் தாக்குதலின் இடது பாரிசத்தில் அமெரிக்க மூன்றும் படை—ஜெனரல் பேட்டன் தலைமையில்—நாஜிகளைத் தாக்கி வருகின்றது.

நாஜிகள் சோவியத் முனையில் சென்ற வருஷம் குர்ஸ்க் பகுதியில் கடைசியாக ஒரு எதிர்த் தாக்குதலை ஆரம்பித்து தங்களுடைய தோல்வியைத் தவிர்க்கப் பார்த்தனர். அதேபோல, இந்த எதிர்த்தாக்குதலும் அவர்கள் கையாளும் ஒரு கடைசி உபாயம்.

### சோவியத் முனையில்

அவர்களுடைய நிலைமை மிக மோசமாகிவிட்டது. கிழக்குப் போர்முனையில் பிரம்மாண்டமான தாக்குதல் இதோ, அதோ என்றிருக்கின்றது. நான்கு நாட்களுக்கு முன்னர் நாஜி ரேடியோ, "சோவியத் படைகளின் மாரிக்காலத்தாக்குதல் ஆரம்பமாகிவிட்டது" என்று ஒலி பரப்பிற்று. லாட்வியாவிலிருந்து ஹங்கேரி வரையில் 740 மைல் நீளமுள்ள போர் முனையில் இந்தத்தாக்குதல் ஏற்பட்டுவிட்டதாகக் கூறியது நாஜி ரேடியோ.

"ஹங்கேரியின் தலை நகருக்காக நடைபெறும் போர் உச்ச நிலைக்கு வந்து விட்டது. புடாபெஸ்டின் சுற்றுப் புறத்தில் படைகள் கைகலந்து விட்டன" என்று ஜெர்மன் ராணுவ நிபுணர் வான் ஹாமர் கூறுகிறார்.

ஹங்கேரியின் வட கிழக்கிலிருந்து டான்யூப் நதிக்கரை யோரமாகச் சென்று செக் எல்லைக்குள் சோவியத் படைகள் நுழைந்து விட்டன. பிராடிஸ்லாலா என்ற முக்கிய பட்டணத்தை அடைவதற்கான மலைக் கணவாய்களில் சிலவற்றை சோவியத் படைகள் கடந்து விட்டன. வியன்னு நகரும்—ஆஸ்டிரியாவின் தலைநகரம்—அதற்கு சமீபத்திலிருக்கிறது.

ஹங்கேரிக்குள்ளேயே தென்மேற்கில் மார்ஷல் டோல்பூகின் படைகள் மீண்டும் முன்னேறி யிருக்கின்றன. புடாபெஸ்டுக்கு 39மைல் தென்மேற்கிலுள்ள பட்டணத்தையும், 15 மைலுக்கு மேற்கிலுள்ள இன்னொரு நகரையும் பிடித்துவிட்டன.—"புடாபெஸ்டுக்கு மேற்கிலுள்ள பாதைகளை நம்முடைய படைகள் துண்டித்துவிட்டன" என்று கூறுகிறது சோவியத் அறிக்கை.

வடகிழக்கு ஹங்கேரியில் தேசீய அசெம்பளி கூட்டப்பட்டது. அச்சபை ஒரு தாற்காலிக சர்க்காரை அமைத்திருக்கின்றது. ஜெனரல் மைகாங் அந்த மந்திரி சபையின் பிரதமர்.

இந்த சர்க்கார் ஹங்கேரியமக்களை ஜெர்மனியோடுள்ள தொடர்பை துண்டித்துக் கொண்டு, நேசதேசங்களுடன் சேரவேண்டுமென்று கூப்பிட்டிருக்கின்றது. சட்ட நிபுணர்களின் சங்கப் பிரதிநிதி சட்டசபையின் தலைவர். உப தலைவர்களில் ஒருவர் "சீர்திருத்த சர்ச்சு" ஸ்தாபனத்தைச் சேர்ந்த பெரிய மனிதர்.

நாஜிகளின் ஆதிக்கத்தில் பல வருஷங்களாக பீடிக்கப்பட்டிருந்த ஹங்கேரிய மக்களும் சுதந்திரப் பாதையை வரையறுத்துக் கொண்டுவிட்டனர்.

செக்கோஸ்லாவாகியாவில் மார்ஷல் மாலினேவ்ஸ்கியின் படைகள் புகுந்துவிட்டன. ஏற்கனவே அந்நாட்டின் கிழக்குக் கோடியில் ஸ்லாவாகியாவில் ஜெனரல் பெட்ராவின் படைகளிருக்கின்றன. அவை இன்னும் மேற்கே முன்னேறி விட்டால், இவ்விரு படைகளும் ஒன்றுசேர்ந்து 70 நாஜி டிவிஷன்களைத் துண்டித்து விடமுடியும்.

மேலும் போலந்துக்குள்ளும் இப்படைகள் நுழைந்து, போர்முனை விரிவடையும். அச்சமயத்தில் மீண்டும் சோவியத் படைகளின் அபாரமான தாக்குதலை, நாஜிகள்நசித்துப் போவதை உலக மக்கள் காணலாம்.

### திருத்தம்

சென்ற வாரம் "கிராம ரேஷனிங் கைவிடப்படுவதா என்ற தலையங்கத்தில் ஒரு தவறு. கொள்முதல் திட்டம் ரத்து செய்துவிடப்பட்டதாக வந்த செய்தி சரியல்ல. 17-10-44 சர்க்கார் தானியம் வாங்கும் கொள்கையைப்பற்றி 4 அறிக்கைகளை வெளியிட்டனர். இவற்றில் முதல் இரண்டு அறிக்கைகள் திருச்சி, விசாகப்பட்டனம், ராமனுதபுரம், கோவை, திருநெல்வேலி, தென் கன்னடம் ஜில்லாக்களில் நஞ்சை புஞ்சை உபரிதானியம் பூராவையும் சர்க்கார் வாங்கும் திட்டத்தைப் பற்றி இவை ரத்தாகவில்லை. மற்றுமுள்ள 2 அறிக்கைகள் பெல்லாரி, அனந்தப்பூர், கர்நூல், கடப்பை, சேலம், மதுரை, செங்கல்பட்டு, வட ஆற்காடு, சித்தூர் ஜில்லாக்களில் விவசாயிகள் சாகுபடியாகும் விஸ்தீரணத்தையொட்டி புஞ்சை தானியத்தில் ஒரு பகுதியை வாங்குவதென்றும் திட்டத்தைப்பற்றி, இவை இரண்டும்தான்·இப்பொழுதுசென்ற வார கெஜட் அறிக்கைப்படி ரத்தாகி விட்டன.

# தேசபக்தர்களுக்கு சவால்

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

கள். 'பாரததேவி' போல் தேசீயம் போதித்துவரும் பத்திரிகைகளைக் கண்டால் காங்கிரஸ்காரர்களிடம் எவ்வித நம்பிக்கையும் ஏற்படாது. இவ் விஷயத்தில் காங்கிரஸ்காரர்களுக்கும் பெரிய பொறுப்பு இருக்கின்றது. காங்கிரஸ்-லீக் சமரஸம் அவசியமாகிவிட்டது என்று உணர்வதுடன், லீக் கோருவதில் என்ன நியாயம் இருக்கிறது? அவர்கள் ஏன், கோருகிறார்கள். சுதந்திரத்தினுல் தூண்டப்படுகின்றனரா, அல்லது சில காங்கிரஸ்காரர்கள் நினைத்துக்கொண் டிருப்பதைப்போல சண்டித்தனமா என்பதை யோசித்து, முஸ்லிம்களின் சுதந்திரக்கோரிக்கை பாக்கிஸ்தான் என்று முடிவுக்கு வர வேண்டும்.

### நம்பிக்கைவேண்டும்

வேவலுடைய பிரசங்கத்தில் நம்பிக்கைவேண்டும்,என்று கூறுகிறார். ஆம் நம்பிக்கை வேண்டியதுதான். நம்முடைய தேசபக்தியில், நம்முடைய சகோதர தேசபக்தர்களிடத்தில், லீகர்களிடத்தில் நம்பிக்கை வேண்டும். அதுமட்டுமல்ல பொதுஜன சக்தியில் நம்பிக்கைவேண்டும்.

### பொதுஜன பிரிட்டன்

வேவல் ஏகாதிபத்தியவாதிகளின் பிரதிநிதி; ஏமரியும் வேவலும் அதிகார மமதையுடன் குருட்டு வைத்தியம் போதிக்கலாம். ஆனல் அவர்களுடைய நாட்டு மக்கள் சும்மா இருக்கவில்லை. சமீபத்தில் நடந்த பிரிட்டிஷ் தொழிற்கட்சி மகாநாட்டில் அவர்களுடைய குரல் கேட்டது. சர்ச்சில் சர்க்காரில் கலந்துகொண்டுள்ள தொழிற்கட்சி தலைவர்களின் முகத்திலடித்தாற்போல், கட்சி நிர்வாகத்தின் எதிர்ப்பையும் சமாளித்து இந்தியத் தலைவர்களின் விடுதலையை அக்குரல் கோரிற்று; சுதந்திர இந்திய தேசீய சர்க்கார் அவசியமென்று வற்புறுத்தியது; உடனடியாக அரசியல் நெருக்கடியைத் தீர்க்கவேண்டுமென்று வலியுறுத்தியது.

இந்தக் குரல் ஓங்கி வளர்ந்து வருகின்றது. சர்ச்சிலின் போக்கைத் தடுத்து மாற்றும் சக்தியை அது திரட்டும். கட்சித் தலைவர்களின் முகத்திலடித்து, பிரிட்டிஷ் தொழிலாளிகளின் விருப்பத்தைத் தெரிவித்துவிட்டது.

பிரிட்டிஷ் தொழிலாளிகள் ஏகாதிபத்தியவாதிகளை நிர்ப்பந்திக்கின்றனர். வேவல்கள் இங்கு நமக்குச் சவால்விடுத்து, காங்கிரஸ்—லீக் சமரஸம் ஏற்படாது தடைப்படுத்தப் பார்க்கின்றனர். "தேசபக்திக்கு அறைகூவல்" என்று 'தினமணி' தலையங்கம் கூறுகின்றது. ஆம், நம்முடைய தேசபக்திக்கு அறைகூவல்தான். இந்த அறைகூவலுக்கு எப்படி பதிலளிக்கப்போகிறோம்? "பாரததேவி" கூறும் வழியில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகளைப் பார்த்து லீகைப் புறக்கணித்து "காங்கிரஸோடு சமரஸம் செய்துகொள்" என்ரு? அல்லது லீகுடன் சேர்ந்து, காங்கிரஸ்-லீக் சமரஸம் ஏற்படுத்தி அதிகாரத்தை நாமே, இந்தியர் எனும் பெருமையுடன் எடுத்துக்கொள்ளப்போகிறோமா?

# சர்ச்சில் பிடிவாதத்துக்கு சாவுமணி?

## ஈ. ஏ. எம். சமரச ஷரத்துகள்

கிரேக்க நாட்டில் நெருக்கடி நீடிக்கிறது. போராட்டம் கடுமையாகிக்கொண்டு வருகிறது.

உலகம் ஒருமுகமாக சர்ச்சிலைக் கண்டிக்கிறது. சர்ச்சில் வாதத்துக்கு பின்பாட்டு பாடும் "லண்டன் டைம்ஸ்" கூட சர்ச்சிலின் போக்கை வன்மையாக ஆட்சேபிக்கிறது. "பல கன்ஸர்வேடிவ் பார்லிமெண்ட் அங்கத்தினர்கள் சர்ச்சில் கொள்கையில் அதிருப்தி தெரிவிக்கின்றனர்" என்கிறார் அமெரிக்க யுனைடெட் பிரஸ் நிருபர்.

மிதவாதி பத்திரிகைகள் ஆவேசமாய் எழுதுகின்றன.

"முடிமன்னர்களுக்கும் இளவரசர்களுக்கும் சர்ச்சிலுக்குள்ள பாசமும் வாஞ்சையும்தான் ஐரோப்பா, சோவியத் யூனியன், அமெரிக்கா

**எஸ். ராமகிருஷ்ணன்**

ஆகிய நாடுகளில் சர்ச்சில் பிற்போக்கு ஆட்சிகளை ஏற்படுத்தப் பார்க்கிறாரென்ற அபிப்ராயத்தை உறுதிப்படுத்தி யிருக்கிறது" என்று எழுதுகிறார் நியூஸ் கிரானிகல் விமர்சகர்.

போன ஞாயிற்றுக்கிழமை லண்டனில் ஒரு மாபெரும் ஆர்ப்பாட்டம் நடந்தது. "கிரீஸில் தலையிடுவதை நிறுத்து" என்று கோஷித்தது.

அமெரிக்காவில், யுத்த முற்காலத்தில் ஹிட்லரை ஆதரித்த ஹியர்ஸ்ட் பத்திரிகைகள் தவிர சகல பத்திரிகைகளும் சர்ச்சிலின் தலையீட்டுக் கொள்கையை கண்டிக்கின்றன.

இவ்விதமாக சர்ச்சில் போக்கை எதிர்க்கும் கண்டனங்கள் அலைமேல் அலையாக மோதும் சமயத்திலே, கிரேக்க நாட்டிலே ஈ.ஏ.எம். செல்வாக்கு மேன்மேலும் நிதர்சனமாகிறது. ஏதென்ஸில் ஒரு பாகத்தை பிரிட்டிஷ் துருப்புகள் தன்வசமாக்கியிருக்கிறது. தவிர, நாடுமுழுவதும் ஈ.ஏ.எம். செல்வாக்கு பரிபூர்ணமாயிருக்கிறது.

### மீண்டும் பார்லிமெண்ட் விவாதம்

இதன்காரணமாகத்தான் சர்ச்சில் பிடிவாதம் பின்வாங்க வேண்டி ஏற்பட்டிருக்கிறது. தொழிற்கட்சி தலைவர்கள் கிரீஸ் நிலைமையை மீண்டும் விவாதிக்க வேண்டுமென்று கோரிய போது, "இப்பொழுதுதானே ஒரு விவாதம் நடந்தது, ஏன் இன்னொரு விவாதம்?" என்று எரிந்து விழுந்தார் சர்ச்சில், ஆனல் இந்த "வெத்து வேட்டு" பலிக்கவில்லை. சர்ச்சில் இறங்கிவரவேண்டி ஏற்பட்டது.

வியாழக்கிழமை நடந்த விவாதத்தில், எதிர்க்கட்சி தலைவர் கிரீன்வுட் சர்ச்சிலின் பதட்டப் பேச்சுக்கு சாட்டை கொடுத்தார். பிரிட்டிஷ் பட்டாளங்கள் இன்று ஈ.ஏ.எம்மை தாக்குவதை நாஜி பயங்கர போலீஸுக்கு ஒப்பிட்டார். கிரிஸ்துமஸ் காலத்திலாவது யுத்த நிறுத்தம் செய்யவேண்டுமென்று யோசனை கூறினர். ஆனல் ஈடன் அந்த யோசனையை ஏற்றுக்கொள்ளவில்லை.

பிரபுக்கள் சபையில் ஒரு தொழிற்கட்சி அங்கத்தினர் "பிரிட்டிஷ் துருப்புகள் கிரேக்க போர்வீரர்களை எதிர்த்துப் போர் செய்ய சம்மதிக்காமல் கலகம் செய்யலாம்" என்று எச்சரித்தார்.

இந்த வளர்ந்துவரும் பொதுஜன சக்தியால் நிர்ப்பந்திக்கப்பட்டுதான் ஜெனரல் ஸ்கோபி சமரஸத்துக்கு சம்பாஷணைகள் ஆரம்பிக்கவேண்டியதாயிற்று.

### ஈ. ஏ. எம். சமரஸ ஷரத்துகள்

ஈ.ஏ.எம். அதன் சமரஸ ஷரத்துகளை ஸ்கோபியிடம் தெரிவித்து விட்டது. அவைகள் கீழ் வருமாறு:-

கிரேக்க படைகளின் ஆயுதங்களை பரிஹரணம் செய்யக் கூடியது கிரேக்க சர்க்கார்தான்; அன்னியர்கள் அல்ல. அதனல், உண்மையான, பரஸ்பர நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்ட பரிபூர்ண சுதந்திர கிரேக்க ஆட்சி ஏற்படவேண்டும். அந்த சர்க்கார்தான் ஈ.ஏ.எம். படைகளையும் பாப்பாண்ரூவின் வலதுசாரி படைகளான ஸேக்ரட் பட்டாலியன், மவுண்டன் பிரிகேட் ஆகியவற்றையும் கலைக்க வேண்டும். அது பாசிஸ்டுகளுடன் ஒத்துழைத்தவர்களை அரசாங்க நிர்வாகத்திலிருந்து விலக்கி தண்டிக்க வேண்டும். அது தேசீய சேனையை அமைக்கவேண்டும்.

பாசிஸ்ட் அனுதாபிகளுக்கு தண்டனை; எதிர்ப்புரட்சிக்காரர் படைகளையும் கலைக்கவேண்டும்; ஜனநாயக சர்க்கார் நிறுவவேண்டும். இவையே கிரேக்க மக்களின் கோஷங்கள்.

### வெற்றி நிச்சயம்

ஜெனரல் ஸ்கோபி இவைகளை ஆலோசித்து வருகிறாராம். இந்த கோரிக்கைகளை அவர் அலட்சியம் செய்ய முடியாது. "ஈ.ஏ.எம்.தான் கிரீஸ்; கிரீஸ்தான் ஈ.ஏ.எம்." என்பது நிதர்சனமாகிவிட்டது. உலகம் ஈ.ஏ.எம். பக்கத்திலிருக்கிறது. சர்ச்சில் கோஷ்டியை ஆதரிக்க யாருமில்லை. ஈ.ஏ.எம்.முடன், தான் சமரஸம் செய்துகொண்டுதான் ஆக வேண்டும்.

இந்தியா பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் இருதயம். மத்தியதரைக் கடல் இதற்கு உயிர்நாடி. கிரீஸ் மத்தியக் கடலில் கேந்திர ஸ்தானம் வகிக்கிறது. தவிர, கிரீஸ் 19-ம் நூற்றாண்டு முதல் பிரிட்டிஷ் பண முதலாளிகளுக்கு வேட்டை ஆடும் பூமியாக இருந்து வந்திருக்கிறது. கிரேக்க சர்க்கார் 19-ம் நூற்றாண்டிலேயே எட்டுசத விகித வட்டிக்கு 10 கோடி பவுன் கடன் வாங்கியிருந்தது. அதில் பெரும்பாகம் பிரிட்டனிடமிருந்துதான். 1936-ல் கிரீஸில் ஏற்பட்ட முடியாட்சியை "அன்னிய முதலாளிகளின் கார்டியன்" என்று கிரேக்க மிதவாதிகள் கூறுவர். அரசாங்க வருடாந்திர பட்ஜெட்டின் செலவில் மூன்றில் ஒருபாகம் வட்டிக்காக ஒதுக்கப்பட்டது. அதனல்தான் இன்றும் அத்தகைய பிற்போக்கு ஆட்சியையே ஸ்தாபிக்கப் பார்த்தனர் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகள். ஆனல் இது 1944; 1939 அல்ல. பாசிஸ்ட் ஆக்கிரமிப்பை எதிர்த்த கிரேக்க மக்கள் விழிப்படைந்து ஒன்றுபட்டு நிற்கின்றனர்; உலகமக்களின் ஆதரவும் அவர்கள் பெற்றிருக்கின்றனர். அவர்களுக்கு வெற்றி நிச்சயம்.

# சோவியத்தில் விவசாயிகள் அடிமைகளாம்!

"மகத்தான ஜனநாயகம்" என்று சோவியத் யூனியனை வர்ணிக்கிறார் ஸ்ரீமதி சரோஜினி நாயுடு. கடந்த 3 வருஷங்களாய் ஒவ்வொரு ஜனப்பகுதியும் சர்வபரித் தியாகம் செய்து சோவியத் அமைப்பை பாதுகாத்ததின்மூலம், சோவியத் அமைப்பின் பரிபூர்ண ஜனநாயகம் நிதரிசனமாகிவிட்டது.

ஆனல் 1941 வரை, ரஷ்ய புரட்சி தினக் கொண்டாட்டங்களில் சோவியத் அரசியலமைப்பை சிலாகித்துப் பேசிய, பேராசிரியர் ரங்காவுக்கு சோவியத் யூனியன் இப்பொழுது வேப்பங்காயாகி விட்டது. 'சோவியத்தில் விவசாயிகளை தொழிலாளர்கள் அடிமைப் படுத்தி யிருக்கின்றனர்" என்ற ஒரு புதிய கட்டுக்கதையை பிரசாரம் செய்கிறார்.

சுப்ரீம் சோவியத்தில் (சட்டச[illegible] 480 தொழிலாளர்கள், 337 விவச[illegible]கள், 326 ஆபீஸ் உத்தியோகஸ்தர்கள் முதலியோர். தவிர, சோவியத் நாட்டில் வயது வந்த ஒவ்வொரு பிரஜைக்கும் ஓட்டு உண்டு.

வேறெந்த நாட்டிலும் சோவியத்திலுள்ளதுபோல் விவசாயிகளுக்கு அவ்வளவு செல்வாக்கு கிடையாது.

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

குலைந்த நாட்டை சீர்படுத்தவேண்டுமே! யுத்தத்திற்குவேண்டிய ஐக்ய முயற்சியைக்காட்டிலும் அதிகமான கூட்டு பிரயத்தனம் வேண்டிய விஷயம் சமாதானகால நிர்மாணவேலை. ஒவ்வொரு சர்க்காரும் ஆலோசித்தனர். ஜனங்களிடையே விவாதங்கள் நடந்தன. ஏகமனதாக 1922ம் வருஷம் டிசம்பர் மாதம் 30ம் தேதி சுயநிர்ணய உரிமை, பிரிந்துபோகும் உரிமையுடன் எல்லா தேசங்களும் தாங்களாக இஷ்டப்பட்டு முன்வந்து ஐக்கிய சோவியத் சோஷலிஸ்ட் குடியரசு அமைத்தனர். இந்த யுத்தத்தில் ஒற்றுமை இன்னும் ஓங்கி உரம் பெற்று 16 தேசங்களும் பரிபூர்ண சுதந்திர சர்க்கார்களாக வளர்ச்சி பெற்று வந்துவிட்டன. இவ்வளவுதான் நான் சொல்லவேண்டியது. முடிவு செய்யவேண்டியது உங்களுடையது.

Edited, Printed and Published by P. RAMAMURTHI at the "Janasakthi" Press 1/6, Davidson Street, G. T. Madras. Regd. No. M. 4514